# ஆழ்வாரும் ஆண்டாளும்

டி. பி. இராமானுஜம்

திருநெல்வேலி ஸ்ரீநம்மாழ்வார் சபா
D107-F, சங்கீதா காலனி
அண்ணா பிரதான சாலை
கே.கே.நகர், சென்னை - 600 078.
☎4802969



This Book is printed and published with the financial assistance of Tirumala Tirupati Devasthanams, under their scheme "Aid to publish religious books"

# சமர்ப்பணம்



ஈகையும் தர்மமும், இப்புவி வந்தனவோ என வாழ்ந்து காட்டிய வள்ளல், பண்பாட்டின் முதல்வர், அமரர், பாரத ரத்னா, உயர்திரு எம்.ஜி.ஆர். அவர்களுக்கு, இந்நூல் அர்ப்பணம்.

# ஆசி உரை

(இறையருட் கலைச் செல்வர், திரைப்பட இயக்குநர்,
திரு. கே. சங்கர் அவர்கள்)

பக்திப் பாசறையிலே, என்னால்

பயிற்றுவிக்கப்பட்ட நல்ல மாணவர்,

இந்நூலாசிரியர், திரு. டி.பி. இராமானுஜம்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்போல, இராமானுஜத்தின் ஆன்மீகப் படைப்புக்களைக் கண்டு அக மகிழ்கிறேன்.

முக்கனியை, இதுவரை பரிமாறியிருக்கிறார் நண்பர்.

'அற்புதர் இராமானுஜர்', 'நூற்றியெட்டுத் திவ்ய தேசங்கள்', 'பாண்டுரங்கன் தரிசனம்' - என்ற மூன்று நூற்களும், இவரால் எழுதி வெளியிடப்பட்டன.

இன்று, தீங்கரும்பாக, 'ஆழ்வாரும் ஆண்டாளும்' என்ற இந்த நாடக நூல் வெளிவருகிறது.

இந்நூலில், பக்கத்திற்குப் பக்கம் பாசுரங்கள் இனிக்கின்றன.

பகவானின் திவ்ய குணங்களைச் சேவிக்கின்ற பாக்கியம் கிடைக்கிறது.

பெருமாள் சந்நிதியில் நிற்கின்ற உணர்வை, இந்த நூலைப் படிக்கின்ற போது பெறலாம்.

தான் பெற்ற பக்திப் பரவசத்தை, நானிலத்திற்கும் எடுத்துச் சொல்கின்ற இந்த முயற்சி வெற்றி பெறக் குருவின் வாழ்த்தாக, என் வாழ்த்தை இங்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலுக்குப் பல்லாண்டு பாடி, அந்த மல்லாண்ட திண்தோள் மணிவண்ணன் அருளை வேண்டுகிறேன்.

# அன்பு உரை

*(திரைப்படக்கதை, வசனகர்த்தா, இயக்குநர், தயாரிப்பாளர், ஓம் சக்தி, திரு.எஸ். ஜெகதீசன் அவர்கள்)*

அழகிய கடலில் ஆனந்தமாகப் பயணம் செய்பவர்களுக்கு, இலட்சியம் எதுவாக இருக்கும்? - கரை சேருவது தானே!

அப்படி அலைபாயும் மனித மனத்துக்கும் ஓர் இலட்சியம் உண்டு. அதுதான் இறைவனின் கழலடி என்னும் கரையிற் சேர்வது.

அப்படிச் சேரவேண்டுமானால் அந்த ஆண்டவனின் அருள் வேண்டுமே! அதை எப்படிப் பெறுவது?

அதற்கு நியம, நிஷ்டை, தவம், யாகம், யோகம், யக்ஞம் எதுவும் தேவையில்லை; அதற்காக நீ மூச்சடக்கவும் வேண்டாம்; பேச்சை முடக்கவும் வேண்டாம்;

பக்தி, ஞானம், வைராக்யம் என்ற மூன்று படிகளை முறைப்படி தாண்டினாலே போதும், இறைவனின் திருவடியைத் தொட்டுவிடலாம் - என்றார்கள் ஆன்றோர்கள்.

அதை எண்ணி மலைத்த மனிதர்களிடம் ஆழ்வார்கள் சொன்னார்கள் - "நீ மூன்று படிகளையும் தாண்ட வேண்டும் என்பதில்லை; ஆண்டவன் அருள் வடிவானவர்; ஆதலால் நீ முதற்படியை அடைந்தாலே போதும்; அவர் அருள் கிடைக்கும்" என்று.

இடையறாத பக்தி, மாசு படாத பக்தி, மனம் நிறைந்த பக்தி இருந்தாலே போதும்; அவன் உன் வசப்படுவான்.

அதனால்தான் பெரியோர்கள் "பக்தி வலையிற் படுவான் காண்" என்று உத்தரவாதம் அளித்தார்கள்.

அந்த எளிய முறையையே ஆழ்வார்கள் அனைவரும் தங்கள் பாசுரங்களில் அழகாக, ஆழமாக, அழுத்தமாகப் பாடினார்கள்.

அந்த ஆழ்வார்களில் ஒருவர்தான் பெரிய ஆழ்வார். அவர் அந்தப் பெயரைப் பெறப் பல காரணங்கள்

இருந்தாலும் பூமிப் பிராட்டியாராகிய பூதேவியையே மகளாகப் பெற்றதைக் காட்டிலும், மற்றொரு பெரிய காரணம் வேண்டுமோ!

அவர் செய்த பக்தியின் பாக்கியம்தான், மாதாவே வந்து அவருக்கு மகளாக வாய்த்தது.

ஆம். அவர்தான் ஆண்டாள் என்னும் பெயர் கொண்டு நம் நெஞ்சங்களை எல்லாம் ஆண்டு கொண்டிருப்பவர்.

ஆழ்வார்கள் காட்டிய வழி, அரிய வழியாக இருந் தாலும், அதை விட எளிய வழியைக் காட்டினார் கோதை.

ஆம், மார்கழியில் நோன்பிருந்து, மாதவனைப் பாடி நின்றால், மாதவங்கள் செய்த பலன், மனங்குளிர வந்தடையும் என்றார்

அந்த மார்கழித் திங்கள் மதிநிறை நன்நாளில் நந்நீராடி மேற் கொள்ள வேண்டிய நோன்பை அவர் தோழிகளுக்கா சொன்னார்?

ஜீவர்களாகிய அனைவருக்கும்தான் சொன்னார்.

அந்த அருட்பாவாகிய திருப்பாவை நமக்குப் புரிய வேண்டும் என்பதற்காக, இந்த நூலில் எளிய தமிழில் விளக்கிக் கூறி இருக்கிறார் ஆசிரியர்.

பல இடங்களில் இந்தப் பாசுரத்துக்கு இதுவா பொருள் என்று நம்மைப் பிரமிக்க வைக்கிறது. இது இந்த ஆசிரியருக்குக் கைவந்த கலை.

ஏற்கெனவே கோதை "கோயிலண்ணா" என்றழைத்த ராமானுச மாமுனி குறித்து அருந்தமிழ் நூல் எழுதிப் பெரும் புகழ் பெற்றவர் ஆசிரியர்.

அது மட்டுமா! பாண்டுரங்கனுக் கென்றே ஒரு நூல் சமைத்து, பக்தி மழையில் அவனைச் சொட்டச் சொட்ட நனைய வைத்தவர், உடையவர் திரு நாமமான ராமானுஜர் என்ற பெயர் கொண்ட ஆசிரியர். எல்லாம் உடையவராகி இன்னும் பல பக்தி இலக்கியங்களைச் சமைத்து, அன்னைத் தமிழுக்கு இன்னும் பல அணிகலன்கள் பூட்ட வேண்டும் என்றும், அதற்கு அந்த எல்லாம் வல்ல வடபத்ரசாயி இவருக்கு வழிகாட்டி அருள வேண்டும் என்றும் பிரார்த்திக்கிறேன்.

# நன்றி உரை

வித்தை கற்பித்தவரின் ஆசி, இந்த சொத்தாகக் கிடைத்திருக்கிறது.

அந்த ஆசானுக்கு, என் அன்பு கனிந்த தெரிவித்துக் கொள்கிறேன்.

ஓம் சக்தியை, வெண் திரையிலே ஒலி வித்தகர், பண்பட்ட எழுத்திற்கும், பண்பட்ட சொந்தக்காரர் ஆன, நண்பர் திரு.எஸ். அவர்கள், அன்பின் காரணமாகப், பழகி காரணமாகப் பலாச் சுளைகள் எனப் பாரா இங்கு பரிமாறியிருக்கிறார்.

அந்த அன்பு நெஞ்சத்திற்கும், என் அளிக்கிறேன்.

வள்ளல் எம்.ஜி. ஆரின் குடும்பத் திரு.எம்.சி. இராமமூர்த்தி அவர்கள்.

இராமமூர்த்தி அவர்களின் துணை திருமதி. விஜயலட்சுமி அவர்கள் - என் இயக்குநர் சங்கர் அவர்களின் புதல்வியார்.

இந்தத் தம்பதியர், எழுதுகின்ற என் வலிமை சேர்த்தார்கள்.

இந்த நூலின் நூறு பிரதிகளை வா உறுதியளித்தார்கள்.

பணம் என்னும் பொருளைப் பற்றிச் படாது, அவன் அருளைப் பேச, ஆன்மீகத் இவர்கள் என்னை உற்சாகப் படுத்தினார்கள்.

உற்சவத்துத் தேரைப் போல, இந்நூல் வேண்டுமென்பது, இவர்களுடைய ஆசையாகு

வள்ளலின் வாரிசிடம் வள்ளலைப் பார்

லட்சுமி கடாட்சம், விஜயலட்சுமி அம் ஆதரவின் மூலம், எனக்குக் கிடைத்திருக்கிறது

இந்தத் தம்பதியர்க்கும், இன்பத் தமிழ் எடுத்து, என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தப் புத்தகத்தை, நல்ல முறையிலே அச்சிட்டு, வெளிக் கொணர்ந்த ஈசுவர் லேசர், திருவாளர்கள் பாலசுப்பிரமணியன் - சங்கர வடிவு தம்பதியர்க்கு, என் நெஞ்சு நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ்ப் பண்ணையிலே விளைந்த வளமான பயிர்கள் அவர்கள்.

இது போன்ற நூற்களின் மூலம், ஆன்மீகத்தைப் பரப்புவதைத் தங்கள் வாழ்வாகக் கொண்டிருப்பவர்கள்.

திசைதோறும் இருக்கும் தெய்வ சந்நிதிகளை, நமக்குத் தெரியப் படுத்தும், நல்ல தொண்டைச் செய்து வருகிறார்கள்.

என்னால் இன்னின்ன காரியம் நடக்க வேண்டு மென்று தீர்மானிப்பவன் அவன்; செயற்படுத்துபவன் அவன்; என் ஆட்டபாட்டமெல்லாம், அந்தப் பரம்பொருளின் சிந்தனையிற் பூத்த சின்ன விஷயங்கள்.

சிங்கத்திற்கு நடை கற்றுக் கொடுத்தவன் அவன்.

சிறகை விரித்துப் பறக்கப் பறவைக்குக் கற்றுக் கொடுத்தவன் அவன்.

எனக்கு எழுதக் கற்றுக் கொடுத்த ஏந்தல், அந்த எழுத்தைப் புத்தகமாக்கப் பொருளையும் கொடுத்திருக்கிறான்.

ஆம் - திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார், இந்தப் புத்தகம் வெளிவர, எனக்குப் பொருள் உதவி புரிந்திருக்கிறார்கள்.

அவர்களுக்கும், என் இதயங் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வேங்கடவன் இருக்கும் திசையைக் காட்டி, வேண்டிய பொருள் உதவியைப் பெற்றுத் தந்த அன்பர். திரு.டி.ஆர். கள்ளப்பிரானுக்கும், என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு.டி.ஆர். கள்ளப்பிரான், பிறர்க்கு உதவுவதைத் தன் ஆசாரமாகக் கொண்டிருப்பவர்.

செடியாய வல் வினைகள் தீர்க்கும் அந்தத் திருமால், அந்த நெடியான், வேங்கடவன், அவன் கோயிலின் வாசல் படியாய் நான் கிடந்து, அவன் பவள வாய்க் காண்பதற்கு, அருள் புரிய மாட்டானா என்று, ஆழ்வாரைப் போல நானும் ஏங்குகிறேன்.

இப்படி அவனை எண்ணி எண்ணி ஏங்குவதிலே இன்பம் இருக்கிறது.

அந்த இன்பத்தை, எனக்கு அருளிய, அந்தச் செம்பவள வாயானுக்கும் என் நன்றியைப் பக்தியோடு, அவன் பாத மலர்களில் சமர்ப்பிக்கிறேன்.


ஆசிரியன்,

டி. பி. இராமானுஜம்

D107-F. சங்கீதா காலனி,

அண்ணா மெயின் ரோடு,

கே.கே. நகர், சென்னை - 600 078.

PH : 4802969

# ஆழ்வாரும்
# ஆண்டாளும்

# ஆழ்வாரும் ஆண்டாளும்

## காட்சி – 1

*திருப்பாற்கடல்*

*பகவான் :* தேவி! பூதேவி பாற்கடலுக்கு வந்து கொண்டிருக்கிறாளே!

என்ன காரணம் என்று தெரியவில்லை.

*ஸ்ரீதேவி :* பகவானின் லீலைகள்தான் விளையாட்டுத் தனமானவை!

மற்றவர்களெல்லாம், காரண காரியங்களோடு காரிய மாற்றுவார்கள்.

*பகவான் :* மனையாள் மெச்சுகின்ற கணவனாகப் பகவானாலேயே இருக்க முடியவில்லை!

(பூதேவி, இப்பொழுது அங்கு வருகிறாள்.)

*பகவான் :* வா பூதேவி!

*பூதேவி :* உங்கள் இருவரையும் நமஸ்கரிக்கிறேன்.

*பகவான் :* பூதேவி! உன் பூமண்டலத்தில், நூற்று எட்டு க்ஷேத்திரங்களில் குடி கொண்டு விட்டேன்.

கலியுகத்தில், தர்மத்திற்கு அரணாக, இந்தத் திவ்ய தேசங்கள் திகழ்ந்து கொண்டிருக்கின்றன.

இப்பொழுது திருப்திதானே?

*பூதேவி :* ஆனாலும், என் மனதிலே குறை ஒன்று இருக்கிறது சுவாமி!

**பகவான் :** பெண்களைத் திருப்திப் படுத்துப் பகவானாலேயே முடியாது போலும்!

**ஸ்ரீதேவி :** பூதேவி, என்ன சொல்கிறாள் என்று கேட்டு விட்டுப் பகவான் பொன்மொழிகளை உதிர்க்கலாம்!

**பகவான் :** நான் பேசினது சீதை மாத்திரந்தான். கேட்பதுதான் காதை காதையாகக் கடலளவு இருக்கிறது.

பொருள் இல்லாமல் பூதேவி பேச மாட்டாள் என்பது உண்மை.

என்னவென்று சொல்லும்மா...

**பூதேவி :** சுவாமி! மாந்தர்கள் எல்லாம் பகவானைத் தெளிவாகத் தெரிந்து கொண்டார்கள் என்று சொல்வதற்கு இல்லை.

அவர்களுக்குத் தெரிந்த மொழியில், தெய்வம் உணர்த்தப்படவில்லை.

பகவானை அனுபவிக்கின்ற கனிவை, இனிமையை, அவர்கள் இழந்து நிற்கிறார்கள்.

கன்னலே! அமுதே! கனிச்சாறே! - இப்படித் தங்களை, அவர்கள் கொஞ்சுகின்ற நெருக்கத்தை, அவர்கள் காண வேண்டும்.

பக்தி, அவர்கள் வாழ்வோடு பங்குபெற வேண்டும்.

அவர்கள் மனதை வளப்படுத்தும் பாங்கு பெற வேண்டும்.

அவர்கள் பேசுகின்ற மொழியில், பிரம்மம் ஆனத் தாங்கள் தெரிய வேண்டும்.

**பகவான் :** உன் எண்ணம் புரிகிறது பூதேவி.

ஏரோட்டுபவனும் என்னை நன்றாகப் புரிந்திருக்க வேண்டும்.

வேதத்தின் பொருள், எல்லோருடைய மனத்திலும் வியாபித்திருக்க வேண்டும்.

*அதுதானே உன் கருத்து?*

***பூதேவி :*** *ஆம் சுவாமி!*

***பகவான் :*** *என் படைக்கலன்களின் அம்சமாக ஆழ்வார்கள், பாரதத்தின் தென் மூலையில், தமிழ் மண்ணில் தோன்றுவார்கள்.*

*உயர்நலம் இம்மானிடம் பெற வழிகாட்டு வார்கள்.*

(இது கேட்டுப் பூதேவி, மகிழ்வோடு தலை தாழ்த்திச் சேவிக்கிறாள்.)

## காட்சி – 2

*கச்சியம்பதியின் வீதி*

(சங்கின் ஒலி கேட்கிறது.)

***பின்னணிக் குரல் :*** *பகவானின் பாஞ்ச சன்னியம் என்னும் திருச்சங்கின் அம்சமாகக் கச்சியம்பதியிலே அவதரித்த பொய்கை யாழ்வார், பகவானே சிந்தனை யாக வந்து கொண்டிருக்கிறார்.*

(பொய்கையாழ்வார், வீதி வழியாக வந்து கொண்டிருக்கிறார்

அவரைப் பார்த்ததும் மக்கள், அவரைக் கீழே சாஷ்டாங்கமாக விழுந்து சேவிக்கின்றனர்.)

***ஒரு பெரியவர் :*** (கை குவித்தபடி..) *பொய்கையாழ்வார் என்று போற்றப் பெறுகின்ற பெரியீர்!*

*எங்களுக்கொரு மந்திரத்தைச் சொல்லி அருள வேண்டும்.*

***இன்னொருவர் :*** *அது எங்களுக்குப் புரிவதாகவும் இருக்க வேண்டும்.*

*எங்களால் எளிதில் சொல்லக் கூடியதாகவும் இருக்க வேண்டும்.*

***பொய்கையார் :*** நா, வாயில் இருக்கிறது.

'ஓம் நமோ நாராயணா!' என்ற மந்திரமும், எல்லாராலும் சொல்லக் கூடியதாக இருக்கிறது.

இந்த மூல மந்திரத்தைச் சொல்லி உய்வு பெறாமல், வேறு பாதையிலே செல்லலாமா?

(இசையோடு பாடுகிறார்.)

**"நா வாயில் உண்டே; நமோ நாரணா என்று**
**ஓவாது உரைக்கும் உரை உண்டே; மூவாத**
**மாக்கதிக் கண் செல்லும் வகை உண்டே; என் ஒருவர்**
**தீக்கதிக் கண் செல்லும் திறம்?"**

## காட்சி – 3

*கடல் மல்லையின் வீதி*

***பின்னணிக் குரல் :*** ஏனைய திருப்பதிகளைப் போலப் பகவான் பாம்பணை மேல் பள்ளி கொள்ளாமல், பதியிலேயே பள்ளி கொண்டிருக்கும் இடம், இந்தக் கடல் மல்லை ஸ்தலமாகும்.

இங்குதான், பகவானின் கௌமோதகி என்னும் கதையின் அம்சமாகத் தோன்றினார், பூதத்தாழ்வார்.

(பூதத்தாழ்வார் வந்து கொண்டிருக்கிறார்.)

***ஒரு பக்தர் :*** (பூதத்தாரைப் பார்த்துக் கைகுவித்தபடி...) எங்களுக் கெல்லாம் துணையாக நீங்கள் இருக்க வேண்டும் சுவாமி!

***பூதத்தார் :*** துணை!

செங்கண் மால் நாமந்தான் நமக்குத் துணை.

அதை மறந்தவர்கள், மானிடர்களே அல்லர். தர்மத்தை நிலைநிறுத்தும் அந்த மாதவனை

மனதால் நினைந்து, அவன் பேரைக் கூவுவதே உகப்பானதாகும்.

(இசையோடு பாடுகிறார்.)

"சிறந்தார்க்கு எழுதுணையாம் செங்கண்மால் நாமம்
மறந்தாரை மானிடமா வையேன்; அறம் தாங்கும்
மாதவனே என்னும் மனம் படைத்து, மற்று அவன் பேர்
ஓதுவதே நாவினால் உள்ளு"

## காட்சி – 4

*மயிலை வீதி*

*பின்னணிக் குரல் :* தேனமர் சோலை மாட மா மயிலையிலே, பகவானின் நாந்தகம் என்னும் வாளின் அம்சமாகப் பேயாழ்வார் தோன்றினார்.

(பேயாழ்வார், 'ஓம் நமோ நாராயணா' என்ற மூல மந்திரத்தைப் பாடி, உணர்ச்சிப் பெருக்கோடு ஆடியபடி, வீதியிலே வந்து கொண்டிருக்கிறார்.

கை குவித்தபடி, மக்கள் அதைப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர்.)

*ஒரு பக்தர் :* பொங்கு கடல் போலப் பகவானை நேசிப்பவர் இந்தப் பேயாழ்வார். இவரது ஆட்டம், கரை உடைத்துப் பாய்கின்ற பக்தியின் பிரவாகம்.

*இன்னொரு பக்தர் :* (பேயாழ்வாரை நோக்கிக் கை குவித்தபடி) சுவாமி! எதைச் செய்வது?; எதைச் செய்யக் கூடாது? - என்று மயக்கமாக இருக்கிறது.

இந்தக் கலக்கத்தைப் போக்கி அருள வேண்டும்.

*பேயாழ்வார் :* அது நல்லதா, இது கெட்டதா என்று மனம் அலை பாய வேண்டாம்.

அலை பாயும் மனம் தெளிவு பெற, தேன் துழாய் மார்புடையோனைத் தொழுங்கள்.

*அவன் பொற் கழல்கள், உங்கள் ஐயத்தைப் போக்கும்.*

*உங்கள் வினைகளையும் பொசுக்கும்.*

(இசையோடு பாடுகிறார்.)

"அது நன்று இது தீது என்று ஐயப்படாதே
மது நின்ற தண் துழாய் மார்வன் பொதுநின்ற
பொன் அம் கழலே தொழுமின்; முழுவினைகள்
முன்னம் கழலும் முடிந்து"

## காட்சி – 5

*திருமழிசை வீதி*

***பின்னணிக் குரல் :*** *ஒரு துலாக் கோலிலே, இந்த உலகை ஒரு தட்டிலும், திருமழிசையை இன்னொரு தட்டிலும் வைத்தால், மாநீர் மழிசையை வைத்தெடுத்த பக்கமே கனத்திருக்குமாம்!*

*திருமால் அருள் ததும்பிக் கிடக்கும் அந்தத் திருமழிசையிலே, பகவானின் ஆழி என்னும் சக்கரத்தின் அம்சமாய் அவதரித்தவர், திருமழிசையாழ்வார்.*

(ஆழ்வார் திருமழிசை வீதியிலே வரும்பொழுது, மக்கள் திருவிழாக் கூட்டம் போலத் திரண்டு வந்து சேவிக்கின்றனர்.)

***ஒரு குறும்புக்காரன் :*** *ஐயா! உங்களிடம் ஒரு கேள்வி கேட்கலாமா?*

***திருமழிசையாழ்வார் :*** *கேட்கும் குரலும் அவனதுதான்! பதிலளிக்கும் திறனும் அவனதுதான்! என்னப்பா கேள்வி?*

***குறும்புக்காரன் :*** *ஆனைக்கும் பெருமாளுக்கும் என்ன சம்பந்தம்?*

***ஒரு பக்தர் :*** *சுவாமி! இப்படிக் குதர்க்கமாகக் கேட்பதற்கெல்லாம், பதிலளிக்கத் தேவையில்லை.*

*திருமழிசையாழ்வார் :* தர்க்கத்தில் எல்லாருக்கும் பதில் உண்டு. எம்பெருமானோடு சம்பந்தப் படாதது எதுவும் இல்லை.

ஆனைக்கும் பெருமாளுக்கும் உள்ள சம்பந்தத்தை, அடுக்கு அடுக்காகச் சொல்லிக் கொண்டே போகலாம்.

முதலை வாய்ப்பட்ட கஜேந்திரனைப் பெருமாள் காப்பாற்ற வில்லையா?

கம்சனால் ஏவி விடப்பட்ட யானையைக் கொன்றார்.

ஆயர் பிள்ளையாய்த் தோன்றி, ஆனை... ஆனிரை மேய்த்தார்.

கோகுலத்தில், ஆனெய்... ஆவின் நெய் உண்டார்.

குன்றம் ஒன்றினால், கொடும் மழையிலிருந்து, ஆனை... பசுக் கூட்டத்தோடு, ஆயரையும் காத்தார்.

நப்பின்னைக்காக, ஆனை... ஆனை போன்ற ஏழு எருதுகளை மாய்த்தார்.

போதுமா சுவாமி?

(குதர்க்கமாகக் கேள்வி கேட்டவன், இப்பொழுது அவர் முன் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிடுகிறான்.)

(திருமழிசையாழ்வார் இசையோடு பாடுகிறார்.)

**"ஆனை காத்து ஓர் ஆனைகொன்று**

**அது அன்றி ஆயர் பிள்ளையாய்**

**ஆனை மேய்த்தி ஆனெய் உண்டி**

**அன்று குன்றம் ஒன்றினால்**

**ஆனை காத்து மை அரிக்கண்**

**மாதரார் திறத்து முன்**

**ஆனை அன்று சென்று**

**அடர்த்த மாயம் என்ன மாயமே!"**

# காட்சி – 6

*திருவரங்க வீதி*

*பின்னணிக் குரல் :* திருவரங்கப் பெருநகருள், தெண்ணீர்ப் பொன்னி திரைக் கையால் அடிவருடப், பள்ளி கொள்ளும் கருமணியைக் கோமளத்தைக் கண்டு கண்டு களிப்படைய, மன்னன் என்னும் மகுடத்தைத் துறந்து விட்டு வந்திருக்கும் குலசேகரர்! இவர், பகவானின் கௌஸ்துப அம்சர்.

(குலசேகரப் பெருமாள் வீதியிலே நடந்து வந்து கொண்டிருக்கிறார்.)

*ஒரு பக்தர் :* (இன்னொருவரிடம்) அதோ, குலசேகரப் பெருமாள் வருகிறார்.

*மற்றவர் :* இந்த ஆழ்வாருக்கு ஏன் பெருமாள் என்ற பெயர் வந்தது?

*முன்னவர் :* பெருமாளான இராமபிரான், காடேகினதைப் பற்றி, அவ்வளவு உருக்கமாகப் பாடியதால், இவருக்கே பெருமாள் என்ற பெயர் நிலைத்து வி[illegible]து.

"மெல் அணை மேல் முன் துயின்றாய்;

இன்னு இனிப் போய் வியன்கான

மரத்தின் நீழற் கல் அணை மேல் கண்

துயலக் கற்றனையோ? காகுத்தா?

கரிய கோவே!"

- என்று என்புருகப் பாடியிருக்கிறார்.

(வீதியிலே ஒரு கைக் குழந்தை அழுது கொண்டிருக்க, தாய் அதைத் தூங்க வைக்க முயல்கிறாள். முடியவில்லை.

குழந்தை அழுகையை நிறுத்தவில்லை. குலசேகரப் பெருமாள் அவ்விடம் வருகிறார்.

குலசேகரரை அங்கு கண்டதும், பலர் அங்கு கூடுகின்றனர்.)

*ஒருவர் :* பெருமாளே! பெருமாளைப் பற்றிச் சொல்லுங்களேன்.

*குலசேகரர் :* இந்தக் குழந்தையைத் தாலாட்டிப் பாடி உறங்க வைக்க வேண்டும்.

அந்தத் தாலா! ' ,(ி லே, என் பெருமாளையும் பேசி விடுகிறேன்.

(இசையோடு பாடுகிறார்.)

"பார் ஆளும் படர் செல்வம் பரதநம்பிக்கே அருளி
ஆரா அன்பு இளையவனோடு அருங்கானம் அடைந்தவனே
சீர் ஆளும் வரை மார்பா! திருக்கண்ணபுரத்து அரசே!
தார் ஆரும் நீண்முடி என்தாசரதீ! தாலேலோ!"

(குழந்தை இப்பொழுது தூங்கி விடுகிறது. ஆழ்வாரைப் பார்த்து, எல்லோரும் கையெடுத்துக் கும்பிடுகின்றனர்.)

## காட்சி – 7

*திருவரங்கம் வீதி*

*பின்னணிக்குரல் :* பாயும் நீர் அரங்கத்தின் பரந்த வீதியிலே, பகவானின் வைஜயந்தி என்னும் வனமாலை அம்சமாகத் தோன்றிய தொண்டரடிப் பொடியாழ்வார், கண்ணனைக் கார் முகில் வண்ணனைக் கோயில் கொண்ட கரும்பினை எண்ணியவாறே நடந்து வருகிறார்.

(ஆழ்வார் வீதியிலே நடந்து வருகிறார். அப்பொழுது ஒரு பல்லக்கு, அவர் முன் வந்து நிற்கிறது.

பல்லக்கின் முன் வருபவன், ஆழ்வாரிடம் பணிவோடு பேசுகிறான்.)

*பல்லக்கு மனிதன் :* சுவாமி! எங்கள் பெருநிலக்கிழார் அழகிய சிங்கர், தன் மாளிகையில், தாங்கள் எப்பொழுதும் தங்கி இருந்து, அவர் செல்வத்தை

ஆளவேண்டும் என்று அன்போடு அழைப்பு விடுத்திருக்கிறார்.

அருள் கூர்ந்து இப்பல்லக்கில் அமருங்கள்.

தங்களை அங்கு கொண்டு போய்ச் சேர்க்கிறேன்.

*ஆழ்வார் :* மாளிகை வாசம்! அடியேனுக்கு அது அயர்வுக்கு வாசல்!

இந்தச் சுவையிலே எனக்குச் சுகம் இல்லை.

அவன் பச்சை மேனியைப் பவள வாயைக் கமலச் செங்கண்ணைப் பார்த்துப் பாாத்துப் பசியாறுபவன் நான்!

அவனை அச்சுதா என்றும், அமரர் ஏறே என்றும், ஆயர்தம் கொழுந்தே என்றும், கூவிக் கூவிக் கூத்தாடுவதில்தான், என் சிந்தை குளிரும்!

(இசையோடு பாடுகிறார்.)

"பச்சை மாமலைபோல் மேனி, பவளவாய், கமலச் செங்கண்

அச்சுதா! அமரர்ஏறே! ஆயர்தம் கொழுந்தே! என்னும்

இச்சுவை தவிர, யான் போய் இந்திரலோகம் ஆளும்

அச்சுவை பெறினும் வேண்டேன், அரங்க மாநகருளானே"

(இப்பாட்டைக் கேட்டபடி, கூட்டம் அங்கு திரளுகிறது.)

## காட்சி – 8

*காவிரி ஆற்றங்கரை*

*பின்னணிக்குரல் :* பகவானின் ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய்த் தோன்றிய பாணர் இவர்.

காவிரி ஆற்றின் மறுகரையில் நின்று, அரங்கனின் கோபுரத்தை மாத்திரமே கண்டு கண்டு, நெஞ்சிலே நீலமேனியனை நிறைத்துக் கொண்டவர்.

பஞ்சமர் என்பதால், கோயிலினுட் செல்லத் தடை இருந்தாலும், ஞாலம் ஏழும் உண்டான், பின்னர் இவரையும் தன்னுட் கொண்டான்.

(பாணர் கா' ' ப்' ' , அ' 'ரைப் பார்த்தபடி இரண்டு அந்தணர்கள் காவிரியிலே குளித்துக் கொண்டிருக்கின்றனர்.)

*ஓர் அந்தணர் :* (மற்றவரிடம்) ஓய்! அந்தப் பாணன் பாட்டு அமிழ்தமாகத் தித்திக்கும்.

*இன்னொரு அந்தணர் :* நம் மந்திரத்தை விட, அவன் பாடல்தான் அரங்கனுக்கு உகப்பாக இருக்கும். பாட ஆரம்பித்து வி' ' ான், கேளும்!

(பாணர் இசையோடு பாடுகிறார்.)

"கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்ட வாயன் என் உள்ளம் கவர்ந்தானை
அண்டர்கோன் அணி அரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள் மற்று ஒன்றினைக் காணாவே"

## காட்சி – 9

*திருவேங்கட மலை*

*பின்னணிக் குரல் :* பகவானின் சார்ங்கம் என்ற வில்லின் அம்சமாக அவதரித்த திருமங்கையாழ்வார், தெள்ளியார் வணங்கும் மலை திருவேங்கடததைச் சேவிக்க வந்திருக்கிறார்.

'எண்திசைகளும் ஏழ் உலகமும்
வாங்கி பொன் வயிற்றில் பெய்து
பண்டு ஓர் ஆல் இலைப் பள்ளி கொண்டவனை'

எண்ணியபடி நடந்து வருகிறார்.

(திருமங்கையாழ்வார் காட்டப்படுகிறார். சிலர் ஓடி வந்து, திருமங்கையாழ்வாரைச் சூழ்ந்து நின்று சேவிக்கின்றனர்.)

*ஒரு பக்தர் :* சுவாமி! தங்களைக் கண்டு கொள்ள, எங்கெங்கோ சுற்றி அலைந்தோம்.

**ஆழ்வார் :** நீங்கள் கண்டு கொள்ள வேண்டியது என்னையல்ல!

ஓர் நலம் தரும் சொல்லை!

'நாராயணா!' என்னும் நாமத்தை!

அதுதான் உங்கட்கு மேன்மையைத் தரும். செல்வத்தைத் தரும். உங்கள் துயரமெல்லாம் தரைமட்டமாகும். திரு வீடு தரும். அவன் அருளைத் தரும். வலிமையைத் தரும். பெற்ற தாயை விடப் பேணி நல்லன செய்யும். இன்னும் நலம் பல செய்யும்.

இதற்கெல்லாம் காரணமான அந்த நாராயண மந்திரத்தை, நான் கண்டு கொண்டேன்.

நீங்களும், நம்முடைய வினைக்கு நஞ்சான அந்த நாராயணாஎன்னும் நாமத்தைக் கண்டு கொண்டு உய்வு பெறுங்கள்!

(இசையோடு பாடுகிறார்.)

"குலம் தரும்; செல்வம் தந்திடும்; அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலம் தரம் செய்யும்; நீள் விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலம் தரும்; மற்றும் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயின செய்யும்;
நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம்"

## காட்சி – 10

*திருக்குருகூர் கோயில் புளியமரத்தடி*

(புளிய மரத்தடியில் மோனத் தவத்தில் இருக்கும் சடகோபர் காட்டப்படுகிறார்.

அருகே, பணிவோடு மதுரகவியார் நின்று கொண்டிருக்கிறார்.

பக்தர்களும் அங்கு திரண்டு வந்து, சடகோபரைச் சேவித்தபடி நின்று கொண்டிருக்கின்றனர்.)

*பின்னணிக்குரல் :* நான்கு வேதங்களும் நனிசுவை தமிழில் வெளிவர வேண்டுமென்று, சேனை முதலிகளின் அம்சமாக அவதரித்தவர், இந்தச் சடகோபர்.

வேதம் தமிழ் செய்த மாறன் இவர்.

எல்லா சமயத்தாரும் ஒப்புக் கொள்ளும்படிப் பகவானைப் பொதுத் தன்மையோடு பாடிய ஆழ்வார் இவர்.

எல்லா நெறியினரும் இவரை, 'நம்ம ஆழ்வார்' என்று உரிமையோடு கொண்டாடுவர்.

இவர் அருகே, பணிவோடு நின்று கொண்டிருப்பவர், மதுரகவி ஆழ்வார்.

இவர், பகவானின் ஸ்ரீவைநதேயன் அம்சமாக அவதரித்தவர்.

இந்த ஆழ்வார், நம்மாழ்வாரையேத் தெய்வமாகக் காண்பவர்.

நம்மாழ்வாரைத் தவிர, வேறு எந்தத் தெய்வத்தையும், தான் பாடப் போவது இல்லை என்று வைராக்கியம் பூண்டிருப்பவர்.

*ஒரு பக்தர் :* (மதுர கவியாரைப் பார்த்து)

சுவாமி! நம்மாழ்வார் நான்கு வேதத்தைத் தமிழிலே தந்திருப்பதாகச் சொல்கிறார்களே!

ரிக் வேதத்தின் சாரத்தைத் தமிழிலே வடித்திருப்பதை, ஒரு பாடல் மூலம், எங்களுக்கு உணர்த்தி அருள முடியுமா?

*மதுர கவியார் :* பசித்த குழந்தைக்குப் பால் உண்டு. கேட்ட உங்களுக்குத் திரு அமுது உண்டு. ஆழ்வார் பாடிய 'திருவிருத்தம்',ரிக்வேதத்தின் சாரந்தான்.

அதிலிருந்து ஒரு தேன் துளி, நீங்கள் சுவைக்கத் தருகிறேன்.

(இசையோடு பாடுகிறார்.)

"வேதனை, வெண்புரி நூலனை, விண்ணோர் பரவ நின்ற
நாதனை, ஞாலம் விழுங்கும் அநாதனை, ஞாலம் தத்தும்
பாதனை, பாற்கடல் பாம்பு அணைமேல் பள்ளிகொண்டருளும்
சீதனையே தொழுவார், விண்ணுளாரிலும் சீரியரே"

*இன்னொரு பக்தர் :* *சுவாமி! யஜுர் வேத சாரமாக....*

*மதுர கவியார் :* *'திருவாசிரியம்' பாடியிருக்கிறார்.*

(இசையோடு பாடுகிறார்.)

"உலகு படைத்து உண்ட எந்தை அறை கழல்
சுடர்ப் பூந்தாமரை சூடுதற்கு அவாவு
ஆர்- உயிர் உருகி உக்க நேரிய
காதல் அன்பில் இன்பு ஈன் தேறல்
அமுத வெள்ளத்தான் ஆம் சிறப்பு விட்டு
ஒரு பொருட்கு அசைவோர் அசைக:
திருவொடு மருவிய
இயற்கை மாயாப் பெரு விறல் உலகம்
மூன்றினொடு நல்வீடு பெறினும்,
கொள்வது எண்ணுமோ - தெள்ளியோர் குறிப்பே?"

*வேறொரு பக்தர் :* *சாம வேதமாகப் பாடிய திருவாய் மொழியிலிருந்து ஒரு தேன் சுளையைத் தாருங்கள் சுவாமி!*

*மதுர கவியார் :* *'திருவாய்மொழி' திகட்டா மொழி. சாம வேதத்தைத் திரட்டித் தந்த மொழி. தமிழின் இனிமையை உருட்டித் தந்த மொழி. ஆழ்வாரின் ஆத்ம உபதேசமாக, வைணவத்தை அலங்கரிக்கும் மொழி.*

(மோனத் தவம் கலைந்து இப்பொழுது நம்மாழ்வாரே, இசையோடு பாடுகிறார்.)

"உயர்வு அற உயர்நலம் உடையவன் எவன்? அவன்,
மயர்வு அற மதி நலம் அருளினன் எவன்? அவன்,
அயர்வு அறும் அமரர்கள் அதிபதி எவன்? அவன்
துயர் அறு சுடர் அடி தொழுது எழு, என் மனனே!"

*மதுர கவியார் :* 'திருவாய் மொழி' என்றதும், ஆழ்வாரின் தவம் கலையப் பாசுரத்தை இசையோடு பேசிவி' ார், பார்த்தீர்களா?

'திருவாய்மொழி', நமக்குக்கிடைத்திருக்கும் விலை மதிக்க முடியாத திரவியம்!

ஆழ்வார், அதர்வண வேத சாரமாகத் 'திருவந்தாதி' பாடியிருக்கிறார்.

(இசையோடு பாடுகிறார்.)

"கார் கலந்தமேனியான், கை கலந்த ஆழியான்,
பார் கலந்த வல் வயிற்றான், பாம்பு அணையான் சீர் கலந்த
சொல் நினைந்து போக்காரேல், சூழ்வினையின் ஆழ்துயரை
என்நினைந்து போக்குவர் இப்போது?"

## காட்சி – 11

*திருக்குருகூர் வீதி*

*பின்னணிக் குரல் :* நம்மாழ்வார் மறைவுக்குப் பிறகு, மதுரகவியார், தம் தெய்வமான நம்மாழ்வார் விக்கிரகத்தை, ஒரு பல்லக்கில் ஏறியருளப் பண்ணி, திருக்குருகூர் வீதியிலே விருது கூறி ஊர்வலம் வருகிறார்.

(அவ்வாறு மதுரகவியார் வருவது காட்டப்படுகிறது. மதுரகவியார் இசையோடு பாடுகிறார்.)

"கண்ணி நுண் சிறுத் தாம்பினால் கட்டு உண்ணப்
பண்ணிய பெருமாயன் என் அப்பனில்,
நண்ணித் தென்குருகூர் நம்பி என்றக்கால்
அண்ணிக்கும் அமுது ஊறும் என் நாவுக்கே"

## காட்சி – 12

*திருப்பாற்கடல்*

(பகவானின் மீது பூமாரி பொழிகிறாள் பூதேவி.)

*பூதேவி :* பூலோகத்தைப் புனித பூமியாக்கி விட்டீர்கள்! கலிகாலத்தைப் பொற்காலமாகப் பொலியச் செய்து விட்டீர்கள்!

திவ்ய தேசங்களைத் திசையெங்கும் இசை பட எழச் செய்து விட்டீர்கள்!

ஸ்ரீதேவியோடு நீங்கள் அங்கெல்லாம் எழுந்தருளியிருக்கும் எழிலைக் காணக் கண்கோடி வேண்டும்!

இத்தனைக்கும் மேலாக, வேதத்தைத் தமிழில் நாதமாகத் தரும் ஆழ்வார்களை அவதரிக்கச் செய்திருக்கிறீர்கள்!

கல் உடைப்பவனும், இப்பொழுது உங்களைக் கனிவோடு பாடிப் பரவுகிறான்!

இதற்காக உங்களைப் பாராட்டப் பூமாரி பொழிகிறேன்!

உங்களைச் சீராட்ட, வண்ண மலர்களைக் கொட்டுகிறேன்!

உங்களை மகிழ்வூட்ட, வாச மலர்களால் சேவிக்கிறேன்!

*பகவான் :* இப்படி மலை போல் மலர்களைக் குவித்தாலும், விஷ்ணு சித்தர் கட்டுகின்ற ஒரு பூமாலைக்கு இவை ஈடாகாது என்று கூறினால், பூதேவி கோபித்துக் கொள்வாளோ, என்னமோ?

*பூதேவி :* விஷ்ணு சித்தர்?

**பகவான் :** உன் பூலோக வாசி. வில்லிபுத்தூரில் வாழ்கின்ற வேதப் பிராமணர்.

அவர் கட்டுகின்ற மாலையில், நான் கட்டுண்டு இருக்கிறேன்.

அவர் வாழ்வே, அருமையான காவியம் என்று நீயே சொல்லப் போகிறாய்.

அவர் தமிழ், அடிக் கரும்பாக இனிக்கப் போகிறது.

அந்தத் தமிழ்ப் பாமாலைகளுக்காகக் காத்திருக்கிறேன்.

பூமாலை கட்டும் அவர், பாமாலையும் கட்டத் துவங்கி விட்டால், பெரியவர் ஆகி விடுவார்.

**பூதேவி :** அவரை இப்படிப் புகழ்கிறீர்களே?

அவ்வளவு உயர்வா அவர்?

**பகவான் :** உனக்கும் அப்பன் அவர்!

**பூதேவி :** அப்படியா! அந்த அப்பனைக் கொஞ்சம் பார்க்கலாமே!

## காட்சி – 13

*வில்லிபுத்தூர் நந்தவனம்*

**பின்னணிக் குரல் :** கருட பகவானின் அம்சமாகத் தோன்றிய விஷ்ணுசித்தர், திருமாலுக்குப் பூவிடுகையே உகப்பென்று கருதி, இந்த நந்தவனக் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கிறார்.

கிழக்கு வெளுக்கு முன்னரே, இவர் உள்ளம் வெளுக்க, அந்த உலகளந்தவனை அளந்தெடுக்க, மாலைக்கு வேண்டிய மலர்களைக் கொய்து கொண்டிருக்கிறார்.

(இருள் விலகா முன்பு, நந்தவனத்தில் பூக் கொய்து கொண் டிருக்கும் விஷ்ணுசித்தர் காட்டப்படுகிறார்.)

***விஷ்ணுசித்தர் :*** என் கண்ணன், கம்ஸனுக்குப் ப செய்த ஸ்ரீ மாலாகாரர் திருமாளிகைக்கு எழுந்தரு பூ இரந்திருக்கிறான்!

அவன் ஆசையைத் தெரிந்து, அடியேன் இந்த கைங்கர்யத்தில் ஈடுபட்டேன்.

செண்பகம், மல்லிகை, செங்கழுநீர், இருவாட் இப்படி எண்பகர் பூவும் கொண்டு, என் மன்னவனுக் மாலை கட்டிச் சாத்துகிறேன்.

நான் எடுத்த பிறவியை, இப்ப இனிமையாக்கி விட்டேன்.

(இப்பொழுது சில வீரர்கள் அங்கு வருகின்றனர்.)

***விஷ்ணுசித்தர் :*** யார் நீங்கள் என்று தெரிந்து கொள் லாமா?

***வீரன் :*** நாங்கள் அரண்மனைக் காவலர்கள். இந் நந்தவனம், உங்களுடையதுதானே?

***விஷ்ணுசித்தர் :*** எல்லாம் அந்த மாயவன் உடையது! நான் இங்கு கைங்கர்யம் செய்து கெண்டிருக்கிறேன்.

***வீரன் :*** எங்கள் அரசியார், பக்கத்து ஊருக் வந்திருக்கிறார்கள்.

அவர்கள் பல்லக்கை ஜோடிக்க மலர்கள் வேண்டும்.

பறித்துக் கொள்கிறோம்.

***விஷ்ணுசித்தர் :*** (வீரர்களைப் பார்த்துக் கைகூப்பித் தொழுதபடி.... பெருமைக்குரியவர்களே! இவை பெருமாளுக்குரிய பூக்கள்!

அவர் சூடிக் களைந்த பிற்பாடுதான் மற்றவர்கள் சூடிக் கொள்ள வேண்டும்.

***வீரன் :*** பெரியவரே! இதனால் அரண்மனை விரோதம் வரலாம்.

***விஷ்ணு சித்தர் :*** என் பெருமாளுக்குரிய நிவேதனப் பொருள் தீட்டுப்படக் கூடாது!

இதனால் எனக்குச் சிரச் சேதம் கிடைத்தால், என் சிரத்திற்குக் கிரீ ம் சூ் டி யதாக மகிழ்வேன்!

***வீரன் :*** பெரியவரே! உங்களைப் புண்படுத்த விரும்ப வில்லை.

வேறு எங்காவது பார்த்துக் கொள்கிறோம்.

(வந்தவர்கள் செல்கின்றனர்.)

***விஷ்ணுசித்தர் :*** இங்கு பூத்திருக்கும் மலர்கள் எல்லாம், என் பெருமாளுக்காகப் பூத்தவை!

அவன் முகர்ந்து பார்க்க, மணம் வீசுபவை!

அவன் சூடி மகிழத் தேன் எடுத்துப் பனி போல் இதழ் எடுத்து இருப்பவை!

இந்த வைகுந்த ராஜனுக்கு உரியதை, நாளை மடியப் போகும் ராஜாக்கள் கேட்டால், கொடுத்து விடுவேனா?

இப்படிச் சோதனைகளைக் காட்டுகிறான் பகவான்!

இந்த விஷ்ணுசித்தன், இதற்கெல்லாம் சோர்ந்து விட மா் ான்!

வெண்டுண்டாலும், உன்னைப் பற்றிய கைகள், பற்றியபடிதான் இருக்கும்! - ஆமாம்!

## காட்சி – 14

*விஷ்ணுசித்தரின் இல்லம்*

(விஷ்ணுசித்தர் பூக்களைத் தொடுத்து மாலை கட்டிக் கொண்டிருக்கிறார்.

அவர் மனையாள் பத்மா, கையில் பாலோடு அங்கு வருகிறாள்.)

***பத்மா :*** அயர்வாக இருக்கிறது என்று சொன்னீர்களே! இந்தப் பாலைக் கொஞ்சம் பருகுங்களேன்...

*விஷ்ணுசித்தர் :* மாலை கட்டி, என் பெருமாளுக்குச் சாத்தாமல், ஒரு துளி நீர் கூட அருந்த மாட்டேன்!

எனக்குக் கழுத்தை நீட்டி இத்தனை வருஷங்கள் ஆகியும், இந்த விஷ்ணுசித்தனை, இன்னும் நீ புரிந்து கொள்ளவில்லையா?

*பத்மா :* பகவான் யாரையும் பட்டினிகிடக்கச் சொல்ல வில்லை.

உடம்பு நன்றாக இருந்தால்தானே, பகவானுக்கு உதவ முடியும்.

அதை நினைவிற் கொள்ளுங்கள்.

*விஷ்ணுசித்தர் :* பகவானுக்கு நாம் உதவுவதா?

சூரியனைப் பார்த்து மலர்கிற தாமரை, சூரியனுக்கு உதவுகிறேன் என்று சொல்வதா?

நம் ஆத்ம திருப்திக்குப் பகவானுக்கு நாம் இந்தக் கைங்கர்யம் செய்கிறோம்.

எறும்பு ஊர்ந்து போய், மலைக்கு முட்டுக் கொடுக்கத் தேவையில்லை.

*பத்மா :* வயதாகும் போது, விரதத்தைக் கொஞ்சம் தளர்த்திக் கொள்ளலாம் என்று சொன்னேன்.

பகவானை யாரும் மறக்கச் சொல்லவில்லை.

(கொட்டி வைக்கப் பெற்றிருக்கும் பூக்களிடையே, ஒரு நாகம் நெளிந்து கொண்டிருப்பதைப் பார்த்துப் பதறுகிறாள் பத்மா.)

*பத்மா :* ஐயோ! பூக்களோடு ஒரு நாகம் நெளிந்து கொண்டு இருக்கிறது! எழுந்திருங்கள்.

*விஷ்ணுசித்தர் :* பதறாதே! என்னோடு ஆதிசேஷனும் இன்று இந்தக் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கிறான்!

*பத்மா :* என்ன பேச்சுப் பேசுகிறீர்கள்? எழுந்திருங்கள்...

(இவ்வாறு கூறியபடி, கணவரை அங்கிருந்து அப்புறப்படுத்த முயல்கிறாள். அதற்குள் நாகம், விஷ்ணுசித்தரைக் கடித்து விடுகிறது.)

*பத்மா :* ஐயையோ! பாம்பு கடித்து விட்டதே!

(இவ்வாறு கூறி அழுகிறாள்.)

எழுந்திருங்கள் - வைத்தியரிடம் போவோம்.

(இப்பொழுது நாகம் அங்கிருந்து சென்று விடுகிறது.)

*விஷ்ணுசித்தர் :* என் பெருமாளுக்குச் செய்கிற இந்தக் கைங்கர்யத்தை இடையில் நிறுத்த மாட்டேன்.

நான் உயிரோடு இருக்க வேண்டும் என்று அவன் எண்ணினால், என்னைப் பிழைப்பித்து விடுவான்!

(இப்பொழுது அவர் உடலெல்லாம் வேர்க்கிறது. ஆனாலும் தொடர்ந்து பூக்கட்டிக் கொண்டிருக்கிறார் விஷ்ணுசித்தர்.)

*பத்மா :* உங்கள் உ ம்பெல்லாம் வேர்க்கிறதே!

மேனியெல்லாம் நீலமும் தெரிகிறதே! எனக்குப் பயமாக இருக்கிறது! நான் போய் வைத்தியரை அழைத்து வரவா?

*விஷ்ணுசித்தர் :* என் பெருமாளுக்கு மாலையைச் சாத்தின பிற்பாடு, வைத்தியர் வீட்டுக்கு நானே போகிறேன்.

*பத்மா :* அதுவரை, என் மஞ்சளுக்கு ஆபத்து வராமல் இருக்கவேண்டுமே?

*விஷ்ணுசித்தர் :* உனக்கு மஞ்சள் மீது மோகம்! எனக்கு, அவன் திருமஞ்சனம் ஆடிக் காத்திருப்பானே என்ற தாகம்!

(மாலையைக் கட்டி முடித்துத் தட்டுத் தடுமாறி எழுந்து நிற்கிறார்.)

## காட்சி – 15

*வில்லிபுத்தூர் வீதி*

(விஷ்ணுசித்தர் பூக்குடலையோடு, மூல மந்திரத்தைச் சொல்லியபடி, தள்ளாடி நடந்து செல்கிறார்.

அவர் மனையாள் பத்மா, பதறியபடி உடன் வருகிறாள்.)

## காட்சி – 16

*கோயில்*

(அர்ச்சகரிடம் மாலையைச் சேர்ப்பிக்கிறார் விஷ்ணுசித்தர்.)

***அர்ச்சகர் :*** *சித்தரே! உங்கட்கு உடல் நலமில்லையா உடம்பெல்லாம் நீலம் பரவி இருக்கிறதே!*

***விஷ்ணுசித்தர் :*** *உடலுக்கு ஒன்றுமில்லை!*

*நீலவண்ணன், என் மேனியெங்கும் நிறைந் திருக்கிறான்!*

*நீங்கள் மாலையைப் பெருமாளுக்குச் சாத்தி தீப ஆராதனையைக் காட்டுங்கள்.*

*சேவித்து விட்டுப் போகிறேன்.*

***பத்மா :*** *இன்னும் தாமதப்படுத்த வேண்டுமா? எனக்குப் பயமாக இருக்கிறது!*

***விஷ்ணுசித்தர் :*** *அவன் சந்நிதியில் நின்று கொண்டு, பயமாக இருக்கிறது என்று சொல்லலாமா?*

*இதைவிட, என் மனதை ரணப்படுத்தும் சொல், வேறு இருக்க முடியுமா?*

(வாயை மூடி மௌனமாக அழுகிறாள் பத்மா)

(விஷ்ணுசித்தர் தள்ளாடி கீழே விழப்போகும்போது, அவரைத் தாங்கிப் பிடித்துக் கொள்கிறாள் பத்மா.

தீப ஆராதனை காட்டப் பெறுகிறது. அரை மயக்க நிலையில், விஷ்ணுசித்தர் கை கூப்பிப் பகவானைச் சேவிக்கிறார்.

அர்ச்சகர், தீர்த்தத்தையும் திருத்துழாயையும், கொண்டு வந்து கொடுக்கிறார்.)

***அர்ச்சகர் :*** *சித்தர் மயக்கமாகி விட்டாரா?*

***பத்மா :*** *அவரைப் பாம்பு கடித்து விட்டது சுவாமி!*

*அர்ச்சகர் :* (அதிர்ச்சியோடு) ஆங்...!

(திருத்துழாயை மெல்கின்ற விஷ்ணுசித்தர், மெல்ல மெல்லக் குணம் பெறுகிறார்.

மனையாளின் பிடியிலிருந்து, தன்னை விடுவித்துக் கொள்கிறார். புத்துணர்ச்சி பெறுகிறார். நாமாவளியை உரத்த குரலில் சொல்கிறார். பகவானைச் சாஷ்டாங்கமாக விழுந்து சேவிக்கிறார்.

இதையெல்லாம் ஆனந்தக் கண்ணீரோடு பார்த்துக் கொண்டிருக்கிறாள் பத்மா.

அர்ச்சகரும் வியப்போடு நிற்கிறார்.)

*அர்ச்சகர் :* *பெருமாளின் பிரசாதம், மரணத்தையும் மாற்றி விடும் என்பதைக் கண்ணெதிரே கண்டு விட்டேன்!*

*விஷ்ணுசித்தர் :* *பழகின மனிதர்களை அவனால் விட முடியுமா?*

*என் கண்ணன் மேய்க்கின்ற பசுக் கூட்டத்திலே, நானும் ஒரு பசு!*

(பத்மா, நாராயண மந்திரத்தை உச்சரித்தபடி, அங்கப் பிரதட்சணம் செய்கிறாள்.)

## காட்சி – 17

*மதுரை மன்னன் அரண்மனை - சயன அறை*

*இரவு நேரம்*

(தன் சயன அறைக்குள் நுழைகிறான், மன்னன் வல்லபதேவன்)

*மன்னன் :* *அரசி! என்ன இது?*

*மஞ்சம் மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. பன்னீர்ச் செம்போடு, பளிங்குச் சிலைபோல நீ காத்திருக்கிறாய்.*

*சந்தனத்தை, என் மார்பிலே பூசிவிட்டுச் சத்தமில்லாமல் சிரித்துக் கொண்டிருக்கிறாய். இதற்கெல்லாம் அர்த்தம் என்ன?*

நமக்கு மணமாகி, வருஷங்கள் பல சென்று விட்டனவே.

**அரசி :** அரண்மனை ஜோசியர் அன்று சொன்னது மறந்து விட்டதா மன்னா?

இன்று இரவு சங்கமம் ஆனால், என்றும் ஜொலிக்கும் ஒரு முத்து பிறக்கும் என்று கூறினாரே!

**மன்னன் :** அந்த ஆருடத்தை நீ நம்பி விட்டாயா?

**அரசி :** என் நம்பிக்கைப்படி நடப்பதால், மன்னருக்கு ஒன்றும் வருத்தம் இல்லையே!

**மன்னன் :** எனக்குத்தான் என்று கொடுத்துவி' । இந்தக் கோமேதகத்தை எப்பொழுதும் அணிந்து ஆனந்திக்க எனக்குக் கசக்குமா?

இரவு நகர் சோதனை முடித்துவிட்டு வந்து விடுகிறேன்.

கற்கண்டு அதுவரை காத்திருக்கட்டும்.

**அரசி :** இன்று ஒரு நாள் நகர் சோதனைக்குப் போகா விட்டால் என்ன?

**மன்னன் :** இன்று ஒரு நாள், நான் மன்னனாக இருக்கக் கூடாது என்கிறாயா?

கடமையைச் செய்யாமல், அரண்மனை, அரசி என்று வளைய வர, இந்த வல்லபதேவனால் முடியுமா?

**அரசி :** நகர் சோதனைக்குச் சென்று வாருங்கள் மன்னா!

வரும்பொழுது, என் மணாளராக வாருங்கள்!

**மன்னன் :** அனலாக வருவேன்! உன்னைச் சேர்ந்து புனலாகிப்போவேன்!

(அங்கிருந்து புறப்படுகிறான்.)

## காட்சி – 18

*நகர வீதி*

*நள்ளிரவு*

(நள்ளிரவில், மன்னன் மாறுவேஷத்தில் நகர் சோதனை செய்கிறான்.

ஒரு வீட்டின் சாளரத்திலிருந்து, ஒரு நாலு வயதுக் குழந்தை, வீதியைப் பார்த்துக் கொண்டிருக்கிறது.

அதன் பெற்றோர் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கின்றனர்.

மன்னன் மாறு வேஷத்தில், அப்பக்கம் வந்து கொண்டிருக்கிறான்.)

***குழந்தை :*** *ஏய்! நீ யாரு? இந்த ராத்திரியிலே போய்ட்டு இருக்கே!*

*நீ திருடன்தானே?*

(மன்னன், என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் தயங்கி நிற்கிறான்.)

***குழந்தை :*** *திருடக் கூடாது!*

*பகவானுக்குத் திருடங்களைக் கண்டா புடிக்கவே புடிக்காது!*

***மன்னன் :*** (வேடிக்கையாக) *அப்போ பசிச்சா என்ன பண்றது?*

***குழந்தை :*** *எங்க ராஜாட்ட போ!*

*அவர் நல்லவர்ன்னு, எங்க அப்பா சொல்லுவாங்க...*

*ராஜாட்ட போனா, அவர் உனக்கு வேலையும் கொடுப்பார்! வயிறு நிறையச் சாப்பாடும் போடுவார்!*

***மன்னன் :*** (மகிழ்ச்சியோடு) *அப்படியே செய்கிறேன்.*

***குழந்தை :*** *கொஞ்சம் நில்லு.*

(குழந்தை உள்ளே சென்று, ஓர் லட்டை எடுத்து வந்து, சாளரத்தின் வழியாக, மன்னனிடம் கொடுக்கிறது.)

*குழந்தை :* இந்தா.. வாங்கிக்கோ.

பசிச்சவங்களுக்கு ஏதாவது கொடுக்கனும்னு, எங்க அம்மா சொல்லுவா...

(மன்னன் லட்டை வாங்கிக் கொள்கிறான்.)

*மன்னன் :* போய்விட்டு வருகிறேன்.

*குழந்தை :* அந்த லட்டை இப்பவே சாப்பிடு. சில சமயம் கைக்குக்கிடைச்சது, வாய்க்குக் கிடைக்காமப் போகும்னு, எங்க அப்பாசொல்லுவாங்க.

(மன்னன் மகிழ்ச்சியோடு, அந்த லட்டைச் சாப்பிடுகிறான்.

குழந்தை ஆர்வத்தோடு அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறது.)

*குழந்தையின் அம்மா :* (தூக்கம் கலைந்த நிலையில்)

பெருமாள்! யாரிடம் பேசிக் கொண்டிருக்கிறாய்?

(குழந்தை, மன்னனை அங்கிருந்து போகச் சொல்லிக் கையாட்டுகிறது.)

*குழந்தை :* வேறு யாரிடமும் இல்லேம்மா!

என் ஆத்மாவோடு நான் பேசிக் கொண்டு இருந்தேன்.

(குழந்தை போய், அம்மாவைக் கட்டிப் பிடித்துப் படுத்துக் கொள்கிறது.)

## காட்சி – 19

*ஒரு வீட்டுத் திண்ணை*

*நள்ளிரவு நேரம்*

(ஒரு வீட்டுத் திண்ணையில், ஒரு வயதான அந்தணர், படுத்து உறங்கிக் கொண்டிருக்கிறார். அவர் உறங்கிய நிலையிலேயே கால் வலியால் முனகிக் கொண்டிருக்கிறார்.)

***அந்தணர் :*** (உறக்கம் கலையாத நிலையில்) *அப்பா! அம்மா! கால் எல்லாம் நோவுகிறதே!*

(அவ்வழியாக வருகின்ற மன்னன், அவரை உற்றுப் பார்க்கிறான்.

அவர் காலடியில் அமர்ந்து, கால்களை மென்மையாகப் பிடித்து விடுகிறான்.

அந்தச் சுகத்தில், அவர் சிறிது நேரம், முனகாமல் உறங்கிக் கொண்டிருக்கிறார்.

திடீரென்று விழித்துப் பார்க்கின்ற அவர், பதறி எழுந்து அமர்கிறார்.

தன் கால்களைப் பிடித்து விட்ட மன்னனையே விழி புரட்டாது பார்க்கிறார்.)

***அந்தணர் :*** *தாங்கள் இந்நாட்டு மன்னர் அல்லவா?*

***மன்னன் :*** *ஆம் சுவாமி - எப்படி அதைக் கண்டு பிடித்தீர்கள்?*

***அந்தணர் :*** *தங்களுடைய சாமுத்திரிகா லட்சணங்கள், தாங்கள் மன்னர் என்பதைக் காட்டி விட்டன. மகுடம் ஏந்திய மன்னன் அவர்கள், இந்தப் பரதேசியின் கால்களைப் பிடித்து விடலாமா?*

***மன்னன் :*** *தங்களைப் போன்ற மஹான்களின் காலடி பட்டு, இந்த மண்ணே சுபிட்சம் பெறும்.*

*நகர் சோதனைக்காக வந்து கொண்டிருந்தேன்.*

*இங்கு தங்களைப் பார்த்த மாத்திரத்திலேயே, தாங்கள் பூஜிக்கப்பட வேண்டியவர் என்பதைத் தெரிந்து கொண்டேன்.*

***அந்தணர் :*** *இந்தச் சரீரம், கங்கையாடிவிட்டு வருவது உண்மை.*

*அந்தப் பெருமைதான், எனக்கு இருப்பது.*

(இப்பொழுது மன்னன், சாஷ்டாங்கமாக அவரை விழுந்து வணங்குகிறான்.)

***மன்னன் :*** *கங்கையில் நீராடிய புண்ணியம், தங்களைச் சேவித்ததால், எனக்கும் கிடைத்து விட்டது.*

என்னோடு அரண்மனை வந்து, அதிதியாக சிலகாலம் தங்கியிருந்து, எங்களைப் பெருமைப் படுத்த வேண்டும்.

*அந்தணர் :* என்னைப் போன்றவர்கள், பால் கறக்கும் நேரந்தான், ஓரிடத்திலே தங்கி இருக்கலாம்.

அதற்கு மேல் தங்கி இருந்தால், எங்கள் தவ வாழ்வு, சுக வாழ்வாகத்திரிந்து விடும்.

மாமன்னர் எனக்கு விடை கொடுக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.

*மன்னன் :* சுவாமி! போவதற்கு முன், எனக்குப் பிச்சை இடும்படி யாசிக்கிறேன்.

*அந்தணர் :* இந்தப் பிச்சைக்காரனிடம் மன்னருக்குக் கொடுப்பதற்கு என்ன இருக்கிறது?

*மன்னன் :* என் வாழ்வுக்கு வழிகாட்டும் நல்ல அருளுரையைத் தாருங்கள் சுவாமி!

*அந்தணர் :* மழைக் காலத்திற்கு வேண்டியதை, வெயிற் காலத்திலே சேமித்துக் கொள்வதைப் போல, இரவுக்கு வேண்டியதைப் பகலிலே தேடிக் கொள்வதைப் போல, மறுமைக்கு வேண்டியதை, இம்மையிலே தேடிப் பெற வேண்டும்.

(இவ்வாறு கூறிவிட்டு, அந்தணர் அங்கிருந்து நடக்கிறார்.

மன்னன் கைகுவித்தபடி நின்று கொண்டிருக்கிறான்.)

## காட்சி – 20

*அரண்மனை - சயன அறை - நள்ளிரவு*

(மன்னன் மனக்குழப்பத்தோடு சயன அறைக்கு வருகிறான்.)

*அரசி :* (மகிழ்ச்சியோடு) வாருங்கள் -

அரண்மனை ஜோசியர் குறித்த நாழிகை வந்து விட்டது.

நீராடி, நீர் ஒடிய சந்தனத்தை, என் மேனியெங்கும் பூசியிருக்கிறேன்.

இந்த மஞ்சத்தைக் களமாக்கி, மாமன்னர் போரிட்டு வெல்லவேண்டும்.

***மன்னன் :*** (பொறுமை இழந்தவனாக)

*அரசி! இந்த விளையாட்டிலே, எனக்கு இப்பொழுது ஈடுபாடு இல்லை.*

*தினவு எடுத்தபோது, நோவு தீரச் செய்த தெல்லாம், எனக்கு இப்பொழுது நாணத்தைத் தருகிறது.*

*இன்று இரவு, நகர் சோதனையின்போது, ஒரு மஹானைச்சந்தித்தேன்.*

*மறுமைக்கு வேண்டியதை, இம்மையில் தேடிக் கொள்ளும்படி அறிவுறுத்தினார்.*

*எதைத் தேடிக் கொள்வது?; எப்படித் தேடிக் கொள்வது? - என்றுஇப்பொழுது என் மனம் அலை பாய்ந்து கொண்டிருக்கிறது.*

***அரசி :*** *இதுதான் உங்கள் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருக்கும் வருத்தமா?*

*மாமன்னா! இம்மையிலே, இந்தப் பிறவியிலே, நீங்கள் செய்யும் புண்ணியங்கள், மறுமைக்குச் சொத்தாகும்.*

*நல்லாட்சி நடத்துகிறீர்கள்.*

*மன்னர் என்ற முறையிலே, இது ஒன்றே உங்கட்குப் போதும்.*

*வேறு எதைச் செய்ய வேண்டும்? - என்று நீங்கள் மயங்கத் தேவையில்லை.*

***மன்னன் :*** *அரசி! இந்த விளக்கத்தால், என் உள்ளம் நிறைவடைய வில்லை.*

*மறுமையிலே, நான் வறியவனாக நிற்பேனோ என்று அஞ்சுகிறேன்.*

*மறுமைக்கு வேண்டியது என்ன?; என்ன? அதற்காக இம்மையிலே நான் செய்ய வேண்டியது என்ன?*

*இந்த வினாவை, நம் ராஜகுரு செல்வ நம்பியிடம் கேட்டுத் தெளிவு பெறுகிறேன்.*

*அவர் நிரம்பக் கற்றவர். கற்றதை மற்றவர்க்குச் சொல்லும் திறம் பெற்றவர். வருகிறேன் அரசி!*

***அரசி :*** இந்த நள்ளிரவு நேரத்திலா புறப்படுகிறீர்கள்?

***மன்னன் :*** உள்ளம் உறங்காத போது, கண்களுக்கு எப்படி உறக்கம் வரும்?

***அரசி :*** ராஜகுருவை இந்த நேரத்திலே சந்திக்க வேண்டுமா?

***மன்னன் :*** நம் ராஜகுரு, இந்த நேரத்திலும் தியானத்தில்தான் இருப்பார்.

***அரசி :*** அப்படியானால் அவரை இங்கு வரவழைக்க லாமே!

***மன்னன் :*** நான் இப்பொழுது அரசனாக அல்ல - தெளிவு பெறச் செல்லும் ஒரு மாணவனாகப் போகிறேன்.

(புறப்படுகிறார்.)

## காட்சி – 21

*நகர வீதி - நள்ளிரவு நேரம்*

**(மன்னன் குதிரையிலே தனியாகச் செல்கிறான்.)**

## காட்சி – 22

*ராஜகுருவின் வீடு*

*நள்ளிரவு நேரம்*

(கட்டிலில் மனையாளோடு ராஜகுரு இருக்கிறார்.)

*ராஜகுரு :* பேரின்பம் அளிப்பவன் பகவான்!

சிற்றின்பம் அளிப்பவள் பத்தினி!

பகலில் அவன் நினைப்பு!

இரவில் உன் அணைப்பு!

பூஜை அறையிலே, மனது அமைதி பெறுகிறது!

இந்தச் சயன அறையிலே, மனது ஆர்ப்பரிக்கிறது!

அது புண்ணியம்!

இது சுக போஜனம்!

*மனையாள் :* இந்த வேளையில் பேச்சு தேவைதானா?

*ராஜகுரு :* நான் கற்ற கல்வி, உணர்ந்ததைச் சொல்ல வைக்கிறது.

மற்றவர்க்கும் எனக்கும் வேறுபாடு இல்லையா?

(இப்பொழுது சயன அறையின் கதவு தட்டப்படும் சத்தம் கேட்கிறது.)

*மன்னன் குரல் :* ராஜ குருவே! மன்னன் வல்லப தேவன் வந்திருக்கிறேன். கதவைத் திறவுங்கள்...

(ராஜகுருவும், அவர் மனையாளும் பதறி எழுந்திருக்கின்றனர்.)

*ராஜகுரு :* இந்த நேரத்தில் மன்னர்!

(ஓடி வந்து கதவைத் திறக்கிறார். அவர் மனையாள், வேறு ஒரு வழியாக, அங்கிருந்து சென்று விடுகிறாள்.)

*மன்னன் :* பொறுத்தருள வேண்டும் - உங்கள் தியானத்தைக் கலைத்து விட்டேனோ?

## காட்சி – 23

*ராஜகுருவின் இல்லத்தில் வேறொரு பகுதி*

*நள்ளிரவு நேரம்*

(ராஜகுருவின் மனையாள், பணிப் பெண்ணிடம் உரையாடிக் கொண்டிருக்கிறாள்.)

***ராஜகுருவின் மனையாள் :*** மன்னர், இந்த நள்ளிரவு நேரத்தில், ராஜகுருவைத் தேடி வந்திருக்கும் காரணம் தெரியவில்லை.

பக்கத்து நாடுகளில் இருந்து ஆபத்து எதுவும் இருக்குமோ என்று அஞ்சுகிறேன்.

படையெடுப்பதற்கு நாள் குறிக்க வந்திருக்கலாம்.

***பணிப்பெண் :*** அரியணையில் அமர்வோர், இப்படி அர்த்த ராத்திரியிலும் விழித்திருந்து வினை ஆற்ற வேண்டியிருக்கிறது.

***ராஜகுருவின் மனையாள் :*** நம் ராஜகுருவிற்கு, இரவு வேளைகளில், வேத சாஸ்திரங்கள் மறைபட்டுப் போகும்! இந்த மர்மத்தை மன்னர் அறிய மா' ' ார்!

## காட்சி – 24

*ராஜகுருவின் சயன அறை*

***ராஜகுரு :*** மன்னா! மறுமைக்காக என்ன செய்ய வேண்டும்? என்று கேட்கிறீர்கள்.

எனக்கும் அது தெளிவாகத் தெரியாததால், எல்லோரையும் போல, பெண்டு பிள்ளை என்று, அவர்களை ஆண்டு அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்.

தவறி விழுபவன், நாக்கிலே சிதறி விழுந்த தேன்துளியைச் சுவைப்பது போல, சுவைத்துக் கொண்டிருக்கிறேன்.

உங்கள் ராஜ குருவுக்கு விளங்காத விஷயங்களும் ஏராளமாக உண்டு.

இதை ஒப்புக் கொள்ளா விட்டால், சத்தியத்தைப் பேசியவன் ஆகமாட்டேன்.

நாளையே அரசவையைக் கூட்டி, சாஸ்திர விற்பன்னர்களை அழைத்துக் கேட்போம்.

**மன்னன் :** தக்க விளக்கமளிப்போருக்குப் பொற்கிழியும் அளிக்கலாம்.

**ராஜகுரு :** நல்ல ஏற்பாடு - அவையிலே ஒரு தோரணம் கட்டி, பொற்கிழியை அதிலே தொங்க விடுவோம்.

பொருத்தமான பதிலைத் தெரிவிப்பவர் கைகளில், பொற்கிழி தானாகவே அறுபட்டு வீழும்.

**மன்னன் :** அப்படி நடக்குமா?

**ராஜகுரு :** சத்திய வாக்குக்கு அந்தச் சக்தி உண்டு மன்னா!

மந்திரச் சொற்களால், மலையே புரளும்! கடலே வற்றும்!

## காட்சி – 25

*அரசவை*

(அரசவையில் தோரணம் கட்டி, பொற்கிழி தொங்க விடப்பட்டிருக்கிறது.

அரசவை கூடியிருக்கிறது.

ஒரு சாஸ்திர விற்பன்னன், பொற்கிழி தொங்க விடப்பட்டிருக்கும் இடத்திற்கு நேர் கீழே நின்று கொண்டு, கையை விரித்தபடி பேசுகிறான்.)

*சாஸ்திர விற்பன்னர் :* பெருமைக்குரிய அரசே!

அருமைக்குரிய அவையோரே!

சகல சாஸ்திரங்களும் என்னுள் அடக்கம். அடக்கம் காரணமாக, இதைச் சொல்லாமல் இருக்கலாம்.

ஆனால், சத்தியத்தைப் பேச வேண்டும் என்பதால், இதைத் தெரிவித்தேன்.

மறுமைக்காக என்ன செய்ய வேண்டும் என்பது கேள்வி.

இதற்கான பதிலை, வேதங்களிலிருந்து திரட்டித் தெளிவாகச் சொன்னவர்கள், இதுவரை யாரும் இல்லை.

இத்றகென்றே பிறவி எடுத்ததுபோல், இப்பொழுது நான் இங்கு வந்து நிற்கிறேன்.

பொற்கிழிக்காக வரவில்லை.

இந்தப் புவனம் தெளிவு பெற வேண்டும்; மன்னரின் மயக்கத்தைப் போக்க வேண்டுமென்பதே, என் நோக்கமாகும்.

*ராஜகுரு :* முன்னுரை தேவைக்கு அதிகமாக நீண்டு விட்டது. உங்கள் விளக்கத்தை இப்பொழுது சொல்லலாமே!

*விற்பன்னர் :* குழந்தையின் அழுகுரலைக் கேட்கப் பத்து மாத முன்னுரை தேவைப்படுகிறது.

*ராஜகுரு :* நாங்களும் பத்து மாதம் இங்கு காத்திருக்க வேண்டுமா?

*விற்பன்னர் :* வேண்டியதில்லை - ரிஷிப்பிண்டம் ராத் தங்காது என்பது போல், இப்பொழுதே பிரசவித்து விடுகிறேன்.

மாமன்னா! கவனமாகக் கேளுங்கள். வேத சுருதிகளைப் போல், என் கருத்துக்கள் சுருக்க மாகவும், பொருளில் பெருக்கமாகவும் இருக்கும்.

*ராஜகுரு :* அதைச் சொல்லி விடலாமே இப்போது!

வெறும் கையால் முழம் போட்டுக் கொண்டிருப்பானேன்!

***விற்பன்னர் :*** மேகம் திரண்டு, மின்னல் வெட்டி, இடி இடித்த பிறகுதான், மழை பொழியும்.

*ராஜகுரு :* இப்பொழுது சொல்லப் போகிறீர்களா?

இந்த அவையை விட்டு நீங்கப் போகிறீர்களா?

***விற்பன்னர் :*** மன்னா! இந்தப் பிறவியிலே தான தருமங்கள் செய்ய வேண்டும்.

பெரியவர்களை நமஸ்கரிக்க வேண்டும்.

பசு மாட்டைப் பூஜிக்க வேண்டும்.

கோயிலுக்குத் தவறாமல் செல்ல வேண்டும்.

புனித நதிகளில் தீர்த்தமாட வேண்டும்.

என்னைப் போன்ற மஹான்களை மதித்து,

அவர்களுக்குப் பொன்னும் பொருளும்

அள்ளி அள்ளிக் கொடுக்க வேண்டும்.

என்னைப் போன்றவர்களுக்குப் பணிவிடை செய்ய, இளம்கன்னியரையும் அனுப்பி வைக்க வேண்டும்.

இவை போதும்! இவை போதும்!

**(இவ்வாறு கூறிவிட்டுப் பொற்கிழியை அண்ணாந்து பார்த்தபடி, கையை விரித்து நிற்கிறார்.**

**மன்னன் கண் ஜாடை காட்ட, காவலர்கள் வந்து, அந்த சாஸ்திர விற்பன்னரை, அங்கிருந்து வெளியே இழுத்துச் செல்கின்றனர்.)**

## காட்சி – 26

*அரசவை*

(ஓர் இசைக் கலைஞன், பொற்கிழிக்குக் கீழே அமர்ந் திருக்கிறான்.)

***இசைக் கலைஞன் :*** *இந்தப் பிறவியிலே இசையால் இறைவனை இசைய வைத்து, மறுமையிலே அருமை பெற வேண்டும்.*

*நாகத்திலிருந்து பகவான் வரை, எல்லோரும் கானத்திற்குக் கட்டுப்படுபவர்கள்.*

*என் ராகம் கேட்டுப் பொற்காசுகள் பொல பொலவென்று உதிர்ந்து விழும்.*

*இது அதிசயமல்ல; இசையின் வசிய சக்தி அது!*

(இவ்வாறு கூறிவிட்டு, ஆலாபனை செய்ய ஆரம்பித்து விடுகிறான்.

பாடிக் கொண்டிருக்கும் பொழுதே, பொற்கிழியை இடை இடையே அண்ணாந்து பார்க்கிறான்.

அது விழாதது கண்டு, உச்ச ஸ்தாயியில் சஞ்சாரம் செய்து பார்க்கிறான்.

இப்பொழுதும் பொற்கிழி விழாதது கண்டு, அழ ஆரம்பித்து விடுகிறான்.

காவலர்கள் ஓடி வந்து, அவனைத் தூக்கிச் செல்கின்றனர்.)

## காட்சி – 27

*அரசவை*

(முனிவர், ஒருவர், பொற்கிழிக்குக் கீழே அமர்ந்து, மோனத் தவத்தில் ஈடுபட்டிருக்கிறார்.

அவர் உதடுகள், 'ஓம்', 'ஓம்' என்று உச்சரித்துக் கொண்டிருக்கின்றன.

அரசவையிலுள்ள பலர், கை குவித்தபடி, பவ்யமாக அமர்ந்திருக்கின்றனர்.

பின் வரிசையில் நின்று கொண்டிருப்போர், ஒருவருக்கொருவர் மெதுவாகப் பேசிக் கொள்கின்றனர்.)

*ஒருவர் :* இவர் விஸ்வரூபம் எடுக்கக் கூடிய தவ முனிவராம்!

*மற்றொருவர் :* பார்த்தாலே தெரிகிறது! பொற்கிழி நிச்சயமாக இப்பொழுது அறுபட்டு வீழ்ந்து விடும்!

*முன்னவர் :* பிறகு, மன்னர், இவரையே ராஜகுரு ஆக்கிவிடலாம்!

*பின்னவர் :* இப்பொழுது இருக்கும் ராஜகுரு, ஆல மரத்தடியில் அமர்ந்து ஆருடம் சொல்லிப் பிழைக்க வேண்டியதுதான்!

*முன்னவர் :* இந்திரப் பதவி உட்பட, எந்தப் பதவியும் நிரந்தரம் அல்ல!

(இப்பொழுது முனிவரின் மடியிலே, பொத்தென்று ஒரு பொட்டலம் வந்து விழுகிறது.)

*முன்னவர் :* பொற்கிழி விழுந்து விட்டது!

(மகிழ்ச்சியோடு கண் விழித்துப் பார்க்கிறார் முனிவர்.)

*முனிவர் :* இம்மையிலே நாம் செய்ய வேண்டியது தவந்தான்! என் மடியிலே விழுந்திருக்கும் பொற்கிழி இதை உறுதிப்படுத்துகிறது.

*ராஜகுரு :* முனிவர் பிரானே! உங்கள் மடியில் விழுந் திருப்பது பொற்கிழியல்ல!

உங்கள் மந்திர சக்தியால், உங்களுக்கு இப்பொழுது தேவைப்படுவது கிடைத்திருக்கிறது என்று எண்ணுகிறேன். பிரித்துப் பாருங்கள்.

(முனிவர் அவசரத்தோடு பிரித்துப் பார்க்கிறார்.)

*முனிவர் :* (அதிர்ச்சியோடு) அன்னம்!

*ராஜகுரு :* தவத்திற்குக் கைமேல் பலனாக, உங்கள் உட வாடாமல் இருக்க, உண்பதற்கு அன்ன கிடைத்திருக்கிறது!

(முனிவர் அன்னப் பொட்டலத்தோடு விரைவாக அங்கிருந் எழுந்து செல்கிறார்.)

## காட்சி – 28

*அரசவை*

(பொற்கிழிக்குக் கீழே அமர்ந்து, ஒருவர் நெருப்பு வளர்த்து ஹோமம் செய்கிறார். அவருடைய உதடுகள், மந்திரங்கள ஓசையின்றி உச்சரித்துக் கொண்டிருக்கின்றன. பின் வரிசையி நிற்போர், இது பற்றிப் பேசிக் கொள்கின்றனர்.)

*ஒருவர் :* யாகத் தீதான், தசரதர்க்கே புத்தி பாக்கியத்தை அளித்தது.

பகவான் ஸ்ரீராமச்சந்திரர் வந்து பிறந்தார்.

*மற்றொருவர் :* இன்றாவது பொற்கிழி அறுபட்டு விழ வேண்டும். இல்லையென்றால் சாஸ்திரங்கள் சொல்வதை, யாரும் புரிந்து கொள்ள வில்லை என்றாகிவிடும்.

*முன்னவர் :* வேதங்கள், யாகங்களைத்தான் சிறப்பாகப பேசுகின்றனவாம்.

இந்த சூட்சமத்தைப் புரிந்து கொண்டார் இவர்.

*மற்றவர் :* அக்கினி கொழுந்து விட்டு எரிவதைப் பார்த்தால், இவர் மடியிலே பொற்கிழி விழுந்து விடும் என்றே தோன்றுகிறது.

(அவர் மடியிலே பொத்தென்று ஒன்று விழுகிறது. எலி! அலறியடித்து அங்கிருந்து ஓடுகிறார்.)

## காட்சி – 29

*அரண்மனை - தனியறை*

(ராஜ குருவிடம் மனம் நொந்து பேசுகிறான் மன்னன்)

***மன்னன் :*** இன்னும் ஒரு மண்டலத்திற்குள், எனக்குப் பொருத்தமான விளக்கம் கிடைக்கா விட்டால், நான் வடக்கிருந்து உயிர் துறக்கப் போகிறேன்!

***ராஜகுரு :*** (அதிர்ச்சியோடு) மன்னா!

***மன்னன் :*** நல்லாட்சி நடத்துவதால் மட்டும், நான் அமைதி பெறமுடியாது!

மறுமைக்கான நல்ல மார்க்கத்தை, மன்னனே தெரியாமல்இருப்பது, வெட்கக் கேடானது!

மக்களுக்கு நான் எப்படி வழிகாட்ட முடியும்?

குருடன் மலை ஏற, மற்றவர்களை அழைத்துச் செல்ல முடியுமா?

போகின்ற உயிரைப் பொருத்தமான காரணத் திற்காகப் போக்கிக் கொள்வது, மானமுள்ளதாகப் பேசப்படும்!

***ராஜகுரு :*** தங்கள் முடிவைக் கொஞ்ச காலத்திற்குத் தள்ளிப் போடுங்கள்.

***மன்னன் :*** நான் சொன்ன ஒரு மண்டல காலம் போதும். சட்டியில் இருந்தால், அதற்குள் அகப்பையில் வந்து விடும்.

***ராஜகுரு :*** மன்னா...

***மன்னன் :*** என்னைத் தனியே இருக்க அனுமதியுங்கள். பிற மனிதர்களைப் பார்க்க, நான் நாணுகிறேன்.

(வேதனையோடு ராஜகுரு அங்கிருந்து செல்கிறார்.)

## காட்சி – 30

*மூத்த அமைச்சரின் இல்லம்*

*பணியாள் :* (அமைச்சரிடம்) ஒரு மண்டலம் முடியப் போகிறது.

மன்னர் வடக்கு இருக்கப் போவதும் நிச்சயமாகிவிட்டது.

இளவரசர் இளவயதோடு இருப்பதால், ராஜ்ய பரிபாலனத்தை, மூத்த அமைச்சர் என்ற முறையில், தாங்களே கவனிக்கப் போகிறீர்கள் என்று எண்ணுகிறோம்.

*அமைச்சர் :* (முக மலர்ச்சியோடு)

நான் ராஜ்யம் ஆளப் பிறந்தவன் என்று, பிறக்கும் போதே கணித்துச் சொல்லிவிட்டார்கள்.

ஆருடம் என்றும் பொய்க்காது.

ஆளுவது இடைக் காலத்தில் மாத்திரமல்ல - இனி என்றென்றும் என் கையில்தான் செங்கோல் இருக்கும்.

## காட்சி – 31

*மூத்த அமைச்சரின் இல்ல வெளிப்புறம்*

(பல பல்லக்குகள் அங்கு வந்து சேருகின்றன.)

## காட்சி – 32

*மூத்த அமைச்சரின் இல்லம் (உட்புறம்)*

*பணியாள் :* ரூபிணியும், லலிதாவும், காமினியும், சுந்தரியும், வனிதாவும், தங்கள் எழில் மயமான எதிர்காலத்தை எண்ணி, இப்பொழுதே தங்கள் தங்கள் இல்லத்திற்கு வருமாறு, பல்லக்குகளை அனுப்பியிருக்கிறார்கள்.

*அமைச்சர் :* (மகிழ்ச்சியோடு) *அரண்மனை உறவுக்கு அடித்தளம் அமைக்கிறார்கள்.*

*மன்னனுக்கு மங்கையர் பலர் இருப்பது அவசியமாகிறது.*

*ராஜ்ய பாரத்தால் கொந்தளிக்கும் மனதோடு இருப்பவனுக்குக்குளிர்ச்சியூட்ட, விதவிதமான நீருற்றுக்கள் தேவைப்படுகின்றன.*

*திருவுளச் சீட்டு போட்டு, ஒரு தேன் சிட்டைத் தேர்ந்தெடு.*

*மங்கல நாளான இன்று, நம் அரசாட்சிக்கு ஆரம்பம் செய்வோம்.*

## காட்சி – 33

*இன்னொரு அமைச்சரின் இல்லம்*

*பணியாள் :* *நம்பிக்கைக்குரிய அமைச்சர் என்ற முறையிலே, தாங்கள்தான் ராஜ்யத்தை ஆளப் போகிறீர்கள் என்று எல்லோரும் பேசிக் கொள்கிறார்கள்.*

*அமைச்சர் :* (மகிழ்ச்சியோடு) *நெருப்பில்லாமல் புகையாது. என்னிடம் பொறுப்பை ஒப்படைக்காவிட்டால், இந்த நாட்டுக்கு இருண்ட காலந்தான்!*

*மூத்தவர்கள் கையில் நாடு போனால், நாடு எதிரிகளின் வேட்டைக் காடாகி விடும்!*

*இன்னொரு பணியாள் :* (விரைவாக அங்கு வந்து)

*அமைச்சரே! சோழநாட்டிலிருந்து ஒற்றன், தங்களைப் பார்க்க வந்திருக்கிறான்.*

*அமைச்சர் :* (முக மலர்ச்சியோடு) *பக்கத்து நா[illegible]ான், நானே இனி அரசன் என்று முடிவெடுத்து, ஒற்றனை அனுப்பி ஆழம் பார்க்கிறான்.*

வரச் சொல்லு...

நான் ராஜ்ய பரிபாலனத்தை ஆரம்பிக்கிறேன்.

வயதில் முதிர்ந்தவர், பல்லக்கில் ஏறி, பஞ்சணைப் பாவையர் வீட்டிற்குச் சென்று கொண்டிருக்கட்டும்.

பாவம்! அரசனென்றால், அவருக்கு அந்தச் சுகம்தான் தெரிகிறது!

## காட்சி – 34

வில்லிபுத்தூர்

விஷ்ணுசித்தரின் இல்லம்

நள்ளிரவு நேரம்

(ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறார் விஷ்ணுசித்தர்.

அவர் கனவிலே, பெருமாள் தோன்றிப் பேசுகிறார்.)

**பெருமாள் :** விஷ்ணுசித்தரே! மதுரை மன்னன் பாண்டியனின் அவையிலே, பொற்கிழி ஒன்று தொங்கிக் கொண்டிருக்கிறது.

மறுமைக்காக, இம்மையிலே செய்ய வேண்டியது என்ன? என்பதைச் சொல்லிப் பொற்கிழியைப் பெற்று வாரும்.

தயங்க வேண்டாம் - நாமே உம் மூலமாக, அந்த விளக்கத்தை அளிக்கப் போகிறோம்.

(கனவு கலைய, விழித்து எழுந்து உட்காருகிறார் விஷ்ணுசித்தர்.)

## காட்சி – 35

விஷ்ணுசித்தரின் இல்லம்

**பத்மா :** பெருமாள் இப்படிக் கனவிலே வந்து சொன்னாரா?

*விஷ்ணுசித்தர் :* ஆமாம் - நான் ஒரு ஞான சூன்யம்!

எனக்கென்ன தெரியும்?

பெருமாள், உறக்கக் கலக்கத்திலே, வேறு யாரிடமோ சொல்வதற்குப் பதிலாக, என்னிடம் வந்து சொல்லி வி[illegible]ர் போலும்!

*பத்மா :* ஏன் அப்படியெல்லாம் பேசுகிறீர்கள்?

உங்கள் பெருமை, பெருமாளுக்கும் எனக்குந்தான் தெரியும்.

சில சமயம், நீங்கள் பேசுகிறபோது, எனக்கு வேதம் கேட்கிற மாதிரி இருக்கும்.

*விஷ்ணுசித்தர் :* நீ புரிந்து கொள்ள முடியாதபடி பேசுகிறேன் என்று சொல்கிறாயா?

*பத்மா :* இப்படி ஏறுக்குமாறு பேசாதீர்கள். உங்கள் சாமர்த்தியத்தை ராஜசபையிலே போய்க் காட்டுங்கள்.

*விஷ்ணுசித்தர் :* அங்கே போய் எதைப் பேசுவது?

உன்னிடமே எனக்கு ஒழுங்காகப் பேச வராது. பெருமாள் பெயரைச் சொல்லிப் பூ கட்டிக் கொண்டிருப்பேன் நான்.

பெரிய பெரிய தத்துவார்த்தங்களை, நான் எப்படிச் சொல்ல முடியும்?

*பத்மா :* அதுதான், பெருமாளே வந்து பேசுவதாகச் சொல்லியிருக்கிறாரே!

*விஷ்ணுசித்தர் :* என்னைக் கிணற்றில் இறக்கி விடுவதற்காக அப்படிச் சொல்லியிருக்கலாம்.

நீந்தத் தெரியாத பிறவி நான்!

சாஸ்திரம், பெரிய சாகரம் ஆயிற்றே!

**பத்மா :** இப்படியெல்லாம் அவநம்பிக்கையோடு பேசாதீர்கள்.

நான் கும்பிடுகிற பெருமாள் பேரிலும், நான் கைப்பிடித்த புருஷன் பேரிலும், எனக்கு நிறைய நம்பிக்கை இருக்கிறது.

சீக்கிரம் மதுரைக்குப் புறப்படுங்கள்.

**விஷ்ணுசித்தர் :** அங்கு போய், அவமானப்பட்டுத் திரும்ப வேண்டுமா?

என்னுடைய கருத்து வெறும் பிதற்றல் என்று சொல்லி, மன்னன் கோபத்தில் சிறைக்குள் போட்டு விட்டாலோ, சிரச்சேதம் செய்து விட்டாலோ, என்ன செய்வது?

**பத்மா :** உங்கள் கையால் மாலை வாங்கிப் போட்டுக் கொள்கிற பெருமாள், உங்களை வாட விடமாட்டார்.

என் கழுத்திலே தொங்குகிற மாங்கல்யம், அவன் சந்நிதியிலே கட்டினது.

எந்த ராஜாங்க உத்திரவாலும், அதற்கு ஆபத்து வர முடியாது.

நீங்கள் முதலில் கோயிலுக்குப் போய் மாலையைக் கொடுத்து விட்டு வாருங்கள்.

நான் பயணத்துக்கு வேண்டிய கட்டுச் சோறைக் கட்டி வைக்கிறேன்.

**விஷ்ணுசித்தர் :** என்னை அனுப்புவது என்று முடிவெடுத்து விட்டாயா?

**பத்மா :** பெருமாள் இப்படிப் பேசினபிறகு, நாம் பேசுவதற்கு என்ன இருக்கிறது?

இப்பொழுது கோயிலுக்குப் புறப்படுங்கள்.

# காட்சி – 36

*கோயில்*

(சந்நிதியில் நின்று பகவானைச் சேவிக்கிறார் விஷ்ணுசித்தர். அவர் மனம் பகவானோடு பேசிக்கொண்டிருக்கிறது.)

***விஷ்ணுசித்தரின் மனம் :*** *என்னப்பா இது விளையாட்டு?*

*கோகுலத்தில் நீ விளையாடியது போதுமப்பா!*

*அதுவே, இன்னும் பல யுகங்களுக்கு, எங்களுக்குப் பலாச் சுளையாகத் தித்திக்கும்!*

*முடவனைப் போய், நிலவைப் பறித்துவா என்று சொல்கிறாயே!*

*என் மனையாளும் என்னை அலங்கரித்து அனுப்பத் துடிக்கின்றாளே!*

*எல்லோரும் நகைக்கும்படி, வேடமிட்டு ஆடச் சொல்கிறாயா?*

*உனக்கு அது உகப்பென்றால், அதையும் செய்து முடிக்கிறேன்!*

*ஆனால், என் மூலமாக, நீயே வந்து பேசுவதாகச் சொன்னாய்!*

*அதைச் சொல்லித்தான் அரசவைக்குள் போவேன்!*

*நீ அங்கு வந்து பேசினால், உன் பெருமை தெரியும்!*

*நீ அங்கு வராவிட்டாலும், உன் பெருமை குறையப் போவதில்லை!*

*என் அகந்தையை அழிக்க, இப்படி ஒரு நாடகம் என்று நான் பாடம் பெற்றுக் கொள்வேன்!*

*போய் வருகிறேனப்பா!*

## காட்சி – 37

*விஷ்ணுசித்தரின் இல்லம்*

(கணவரைச் சுற்றி வந்து கும்பிட்டு, அவர் நெற்றியில் திலகமிட்டு, அவர் கையில் கட்டுச் சோறைக் கொடுக்கிறாள் பத்மா.

பரிதாபமாக நின்று கொண்டிருக்கிறார் விஷ்ணுசித்தர்.)

*பத்மா :* போய் வாருங்கள் - பொற்கிழியோடு திரும்பி வாருங்கள்.

பசிக்கிறபோது, கட்டுச் சோற்றை அவிழ்த்துச் சாப்பிடுங்கள்.

நீங்கள் பசியோடு இருந்தால், என் இமை துடித்து, எனக்கது தெரிந்து விடும்.

என்னைக் கண்ணீர்விட வைத்து விடாதீர்கள். உங்களைத் தஞ்சம் என்று வந்தவள் நான்.

*விஷ்ணுசித்தர் :* பத்மா! பொற்கிழி பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை.

ஆனால், வேளாவேளைக்குக் கட்டுச் சோற்றை அவிழ்த்துச் சாப்பிட்டு விடுவேன்.

அது பற்றி நீ கவலை கொள்ளத் தேவையில்லை.

எல்லாம் அவன் சித்தம்!

போய் வருகிறேன்.

## காட்சி – 38

*வில்லிபுத்தூர் வீதி*

(கையில் கட்டுச் சோறோடு, விஷ்ணுசித்தர், நாணியபடி, வில்லிபுத்தூர் வீதியிலே நடந்து சென்று கொண்டிருக்கிறார்.)

*எதிர்ப்படுபவர் :* விஷ்ணுசித்தரே! கட்டுச் சோறோடு எங்கு புறப்பட்டு விட்டீர்கள்?

***விஷ்ணுசித்தர் :*** (தயக்கத்தோடு) மதுரைக்கு...

***எதிர்ப்பட்டவர் :*** மதுரைக்கா? உம்முடைய மாலையில்லாமல் பெருமாளால் இருக்க முடியுமா?

***விஷ்ணுசித்தர் :*** நான் வரும்வரை, என் மனையாள் மாலை கட்டிக் கோயிலில் சேர்ப்பித்து விடுவாள்.

என் பெருமாளுக்கு மாலை கட்டாமல், கழியும் பொழுது, என்னைப் புண்படுத்தும் வாளாகவே இருக்கும்!

***எதிர்ப்பட்டவர் :*** ஆமாம், பெருமாள் கோயில் சொத்தான நீர், மதுரைக்கு ஏன் போகிறீர்?

***விஷ்ணுசித்தரின் மனம் :*** பொற்கிழிக்காக என்று சொன்னால், இவர் கை கொட்டிச் சிரித்து விடுவார்!

***எதிர்ப்பட்டவர் :*** சித்தரே! மதுரைக்கு ஏன் போகிறீர்? - என்று கேட்டேன்.

***விஷ்ணுசித்தர் :*** (அவசரமாக) மாடு பிடிக்க...

***எதிர்ப்பட்டவர் :*** மதுரைக்குப் போய் மாடு பிடிக்கப் போகிறீரா? நந்தவனக் கைங்கர்யந்தான் செய்து கொண்டிருக்கிறீர்!

பகவான் சந்நிதிக்குப் பாலமுதும் பரிமாறப் போகிறீரா?

***விஷ்ணுசித்தர்:*** அந்தப் பாக்கியமும் அடியேனுக்குக் கிடைத்துவிட்டால், இந்தப் பிறவியை, இந்திரப் பிறவியாக நினைத்து உகப்பேன்!

**(இவ்வாறு கூறிவிட்டு, அவரைக் கைகூப்பித் தொழுது விட்டு, அங்கிருந்து நடக்கிறார்.)**

## காட்சி – 39

*விஷ்ணுசித்தரின் இல்லம் - வெளிப்புறம்*

**(பத்மா, அக்கம் பக்கத்திலுள்ள பெண்களையெல்லாம் திரட்டி வைத்துப் பேசிக்கொண்டிருக்கிறாள்.)**

*பத்மா :* இந்த ஊரிலே ஆர்ப்பரித்துக் கொண்( எவ்வளவு பண்டிதர்கள் இருக்கிறார்கள்!

அந்தக் குறைகுடங்களின் கனவிலெல்லாப பெருமாள் வந்து பேச வில்லை.

நிறைகுடமான என் அகத்துக்காரரை மதுரைக்குப் போய்ப் பொற்கிழியைப் பெற்று வ என்று அனுப்பியிருக்கிறார்.

என் அகத்துக்காரரை விட்டால் பெருமாளுக்கு வேறு நம்பிக்கையான ஆத்ம கிடையாது!

பூக்கட்டுவதிலிருந்து, பொற்கிழியை அறுத்துக் கொண்டு வருவது வரை, எல்லாம் இவர்தான் செய்ய வேண்டும்!

இதெல்லாம் என்னைத் தொட்ட புண்ணியப் என்று நீங்கள் நினைக்கலாம்.

உங்கள் தோழியை நீங்கள் உயர்வாக நினைக்கிறீர்கள்.

ஆனால், என் அகத்துக்காரருக்குத்தான் எல்லாப் பெருமையும் என்று நான் சொல்லுகிறேன்

நான் பேசிக்கொண்டே இருக்கிறேன். நீங்கள் எதுவும் பேசக் காணோமே!

*ஒருத்தி :* நீ பேச விட்டால்தானே!

*மற்றொருத்தி :* பெருமாளே, உனக்கு ஒருத்திக்குத்தான் சொந்தம் என்று பேசினால், நாங்கள் என்ன பேச முடியும்?

*வேறொருத்தி :* பொற்கிழி கிடைப்பதற்கு முன்பே, இப்படி வாய்ப்பந்தல் போ' ரால், அதற்கு நாங்கள் ஒத்து ஊத முடியுமா?

*பிறிதொருத்தி :* பூ 'கட்டுகிறவர், புரியாத விஷயத்தில் தலையிட்டு, அரசவைக்குப் போயிருக்கார்.

அவர் ஆபத்து இல்லாமல் திரும்பி வர வேண்டுமென்று, பெருமாளை வேண்டிக் கொள்.

*வேறொரு பெண் :* நிலைமைக்கு மீறி ஆசைப்பட்டுத் தங்கியிருக்கிற நிழலைப் பறிகொடுத்திடாதே!

*மற்றொரு பெண் :* பூக்குடலையோடு உன் அகத்துக்காரர் இருப்பதுதான் பொருத்தம்!

சேற்றிலே புரளுகிற நண்டு, பட்டு உடுத்திப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்படலாமா?

*பத்மா :* (கோபத்தோடு) போதும் நிறுத்துங்கள்.. அடுத்த வீட்டில் விளக்கு எரிந்தால், உங்கள் மனம் இருட்டாகி விடுகிறது.

என் அகத்துக்காரர், எனக்குச் சகல கலா வல்லவராகத் தெரிகிறார்.

உங்களுக்கு நம்பிக்கை இல்லாவி ' ' ால், போங்கள்.

என் வீட்டு முன்னால் நின்று, அவரைப் பற்றி, நண்டு நாரை என்று பேசாதீர்கள்!

போங்கள்...

*ஒருத்தி :* நீதானே எல்லாரையும் கூப்பிட்டாய்!

*பத்மா :* ஆமாம் கூப்பிட்டேன்.

தோழிகள் என்று எண்ணிக் கூப்பிட்டால், தீயாக வார்த்தைகளைச் சிந்தி வி' ' ர்கள்!

போங்கள் இங்கிருந்து...

**(அங்கு இருக்கின்ற பெண்கள் எல்லாம், முணுமுணுத்தபடி கலைந்து செல்கின்றனர்.)**

## காட்சி – 40

*சாலை*

**(ஒரு மரத்தடியில் அமர்ந்து, கட்டுச் சோறை அவிழ்த்துச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார் விஷ்ணுசித்தர்)**

*விஷ்ணுசித்தர் :* 'உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்' - என்று அந்தச் சடகோபர், எவ்வளவு அற்புதமாகச் சொல்லிவி' ' ார்!

இந்த அன்னம் இல்லாவிட்டால், என் கண்ணனுக்கு எப்படிக் கைங்கர்யம் செய்ய முடியும்?

உயிர்க்கு உயிராய் இருப்பவன், இந்த உடல் ஜீவித்திருக்க, அன்னமாகி, ஆதாரமாகவும் இருக்கிறான்.

இதனால்தான் உண்பதையே, ஒருவகை யாகம் என்று பெரியவர்கள் சொல்கிறார்கள்.

அவனுக்கென்று என்று எண்ணிவிட்டால், எப்பொருளும் ஆகுதி ஆகிவிடுகிறது.

(இப்பொழுது அவ்வழியே சாலையில் ஒரு பல்லக்கு வருகிறது.)

*விருது கூறுபவன் :* நால்வேத நாயகர், சாஸ்திரப் புயல், புராண இதிகாசப் பொக்கிஷம், வடமொழிப் பண்டிதர், தென்தமிழ்ப் புலவர், வாதத்தில் சிங்கம், வளர்புகழில் இமயம், கூத்தர் வருகிறார்! கூத்தர் வருகிறார்!

(இவ்வாறு பல்லக்கின் முன்பு, ஒருவன் விருது கூறிக்கொண்டு செல்கிறான்.

இதைக் கேட்கின்ற விஷ்ணுசித்தர், அவசரமாகக் கையைக் கழுவி விட்டுப் பல்லக்கு செல்லும் திசை நோக்கிச் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிடுகிறார்.

பல்லக்கைப் பின் தொடர்ந்து வருபவனிடம் மெல்லப் பேச்சுக் கொடுக்கிறார், விஷ்ணுசித்தர்.)

*விஷ்ணுசித்தர் :* கற்றவர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்புச் சேருமாமே!

ஐயா! இந்த வேத சொரூபம் எங்கிருந்து வருகிறார்? எங்கு போகிறார்?

*அந்த மனிதன் :* மதுரை அரண்மனையிலே பொற்கிழியைப் பெற முடியாமல் திரும்பிக் கொண்டிருக்கிறார்.

இது கலிகாலமாயிற்றே! அதனால்தான் இப்படி நடந்து விட்டது!

(பல்லக்கோடு அந்த மனிதனும் சென்று விடுகிறான்.)

*விஷ்ணுசித்தர் :* வேத சுலோகங்களைத் தொடுத்துத் தொடுத்துச் சொல்பவர், வெறுங்கையோடு போகிறார்!

வெறும் பூக்களைத் தொடுத்துக் கொண்டிருந்த நான்,பொருளோடு பேச முடியுமா?

கத்துகின்ற தவளையால், எந்தக் கானத்தை இசைக்க முடியும்?

குட்டுப்பட்டுத் திரும்புவதைவிட, தலையைக் காட்டாமல் திரும்பி விடலாம்!

என் பேச்சை ரசிக்க, வடபத்ரசாயி இருக்கிறான். அது போதும்.

சிங்கங்கள் மோதிக் கொள்ளும் இடத்தில், சிறு முயலுக்கு என்ன வேலை?

வில்லிபுத்தூர் போய்ச் சேருகிறேன்.

(இவ்வாறு கூறிவிட்டு, விஷ்ணுசித்தர், வந்த வழியே திரும்பி நடக்கிறார்.

இப்பொழுது ஒரு கருடன், அவர் தலையைத் தாக்கிவிட்டுச் செல்கிறது.)

*விஷ்ணுசித்தர் :* (தனக்குள் பேசிக் கொள்கிறார்)

ஊர் திரும்பாதே என்று தடுக்கிறார் கருடாழ்வார்!

அவன்மேல் பாரத்தைப் போட்டு, மதுரை அரசவைக்குச் செல்கிறேன்.

எனக்குப் பொற்கிழி வேண்டாம் - பொல்லாத இந்த வலையிலிருந்து விடுப ' ı ால் போதும்!

அம்பாக என்னை எடுத்து ஆள்பவர், எந்த வம்பும் தீங்கும் வராமல் காப்பாற்றுவாரா?

பெருமாளே! நீ எப்படி எப்படியோ காயை நகர்த்திக் கொண்டிருக்கிறாய்!

நான், குழப்பமெனும் கடலிலே கவிழ்ந்து கொண்டிருக்கிறேன்!

மதுரைக்குப் போவதைத்தவிர, வேறு மார்க்கம் இல்லை என்று சொல்லிவி' ι ஈய்! போகிறேன்!

## காட்சி – 41

*மதுரை*

*அரண்மனை வாயில்*

***வாயிற் காப்போன் :*** (விஷ்ணுசித்தரை அலட்சியமாகப் பார்த்தபடி...) யாசகம் பெற வந்தீரா?

***விஷ்ணுசித்தர் :*** யாசகத்துக்கு வரவில்லை.

***வாயிற் காப்போன் :*** பின் எதற்காக அரசவைக்குப் போக வேண்டும் என்று கூறுகிறீர்?

***விஷ்ணுசித்தர் :*** (தயக்கத்தோடு) மன்னரின் கேள்விக்குப் பதிலளிக்க...

***வாயிற் காப்போன் :*** (வியப்போடு) நீரா?

நீர் பண்டிதரா? பண்டிதர் என்றால், பட்டுத் துணி போர்த்தியிருப்பார்களே!

***விஷ்ணுசித்தர் :*** நான் பண்டிதன் இல்லை - என் மூலமாகப் பெருமாள், மன்னருக்கு விளக்கம் அளிப்பார்!

(இப்பொழுது பல பணியாட்கள், அங்கு திரண்டு விடுகின்றனர்.)

***ஒரு பணியாள் :*** எந்தப் பெருமாள்? அந்தப் பெருமாளை அழைத்து வந்திருக்கிறீரா?

***விஷ்ணுசித்தர் :*** அழைத்த போதெல்லாம் வருபவன் அவன்! கஜேந்திரன் அழைத்த போது, திரௌபதி அழைத்தபோது, வந்திருக்கிறான்.

***இன்னொரு பணியாள் :*** ஓஹோ! நீர் பகவானைச் சொல்கிறீரா?

*விஷ்ணுசித்தர் :* அவனை நம்பித்தான் இங்கு வந்திருக்கிறேன். ஆடத் தெரியாதவன், வேஷம் கட்டி, கூத்து மேடைக்கு வந்தது போல வந்திருக்கிறேன்.

*வாயிற் காப்போன் :* மன்னருக்கு விளக்கம் அளிக்க விரும்புபவர்களை, உள்ளே அனுப்பி வைக்க வேண்டியது, எங்கள் கடமை. உள்ளே செல்கிறீர்களா?

*விஷ்ணுசித்தர் :* உங்கள் கடமையைச் செய்யுங்கள். எனக்கு விதிக்கப்பட்ட விதியை, அங்கு அனுபவித்துக் கொள்கிறேன்.

*வாயிற் காப்போன் :* கொஞ்சமாவது சாஸ்திர ஞானம் உண்டல்லவா?

*விஷ்ணுசித்தர் :* என் பெருமாள் ஞான சொரூபி ஆயிற்றே!

அவையில் அவன்தான் பேசுவான்!

*ஒரு பணியாள் :* (அங்கு வந்து) யாராவது பண்டிதர் வந்தால், உள்ளே அனுப்பி வையுங்கள்.

ஒரு மண்டலம் முடியப்போகிறது.

*வாயிற் காப்போன் :* இதோ ஒருவர் வந்திருக்கிறார்.

அனுப்பி வைக்கிறோம்.

(விஷ்ணுசித்தரை நோக்கி) இந்தப் பல்லக்கில் அமருங்கள்.

*விஷ்ணுசித்தர் :* பல்லக்கா! இந்தப் பல்லக்கைத் தொட்டுத் தூக்குவதற்கே எனக்கு அருகதை கிடையாது!

*பணியாள் :* (மீண்டும் அங்கு வந்து) சீக்கிரம்.... சீக்கிரம்...

*வாயிற் காப்போன் :* (விஷ்ணுசித்தரை நோக்கி) பல்லக்கில் அழைத்துச் செல்வதுதான், அரச கட்டளை.

சீக்கிரம் அமருங்கள்.

பல்லக்கு இல்லாமல், நீங்கள் அரசவைக்குப் போக முடியாது.

*விஷ்ணுசித்தர் :* பல்லக்கைத் தூக்குங்கள் - பல்லக்கு போகட்டும். நானும் வருகிறேன்.

*பணியாள்:* (மீண்டும் அங்கு வந்து) காலக் கெடு முடியப்போகிறது. சீக்கிரம் பல்லக்கைக் கொண்டு செல்லுங்கள்.

(விஷ்ணுசித்தரே பல்லக்கைத் தூக்க, மற்ற பணியாட்களும் சேர்ந்து தூக்குகின்றனர்.

விஷ்ணுசித்தரும், மற்ற பணியாட்களோடு, வெறும் பல்லக்கைச் சுமந்து செல்கிறார்.)

## காட்சி – 42

*அரசவைக்குச் செல்லும் அரண்மனையின் உட்பகுதி*

(விஷ்ணுசித்தரும் பல்லக்கைத் தூக்கிக் கொண்டு நடக்கிறார்.)

*பல்லக்குத் தூக்கி :* உங்களுடைய விருது என்ன? அதைச் கூற வேண்டும்.

*விஷ்ணுசித்தர் :* அதை நானே கூறிக் கொள்கிறேன்.

## காட்சி – 43

*அரசவை*

(அரசவைக்குப் பல்லக்கைத் தூக்கி வருகின்றனர்.)

*விஷ்ணுசித்தர் :* (பல்லக்கைச் சுமந்தபடி...)

இராமதூதன் போல, பெருமாளின் தூதன், விஷ்ணுசித்தன் வருகிறான்! வருகிறான்!

(பல்லக்கு கீழே இறக்கப்படுகிறது. பல்லக்கிலிருந்து யாரும் இறங்காதது கண்டு, அரசனும் மற்றவர்களும் வியப்பு அடைகின்றனர்.)

*ராஜகுரு :* எங்கே விஷ்ணுசித்தர்?

*விஷ்ணுசித்தர் :* அடியேன்தான், பெருமாளின் தூதனாக வந்திருக்கும் விஷ்ணுசித்தன்!

*ராஜகுரு :* பல்லக்கில் வராமல், தூக்கிக் கொண்டு வருகிறீர்!

*விஷ்ணுசித்தர் :* என் பெருமாளுக்குத்தான் பல்லக்கு!

அவர் இங்கே எழுந்தருளியிருக்கிறார் என்றே நம்புகிறேன்.

அடியேனுக்கு அதைத் தூக்கி வருகின்ற பாக்கியம் கிடைத்ததே - அதுவே போதும்!

*ராஜகுரு :* உம்முடைய பெருமாள், இந்த அரசவைக்கு இப்பொழுது வந்திருக்கிறாரா?

*விஷ்ணுசித்தர் :* இங்கு வந்து, மன்னரின் கேள்விக்கு, என் மூலமாகப் பதிலளிப்பதாக, என் கனவிலே வந்து சொல்லியிருக்கிறார்.

அதனால்தான், வில்லிபுத்தூரில், பூ கட்டிப் பகவானுக்குத் தொண்டு செய்கின்ற நான், மதுரைக்குப் புறப்பட்டு வந்திருக்கிறேன்.

*மன்னன் :* நல்லது - எமக்கு வேண்டியது சரியான விளக்கம்.

அதை நீர் சொன்னாலும் சரி, உம் மூலமாகப் பெருமாள் சொன்னாலும் சரி, அதை ஏற்றுக் கொள்கிறோம்.

உம்முடைய நம்பிக்கையை, நாங்கள் மறுக்கப் போவதில்லை.

*விஷ்ணுசித்தர் :* வட மதுரை உறை என் கண்ணனுக்கும், தென் மதுரை மன்னருக்கும், மற்றுமுள்ள அவையோருக்கும், என்சிரம் தாழ்ந்த வணக்கங்கள்!

*ராஜகுரு :* அப்படிப் பொற்கிழிக்குக் கீழே போய் நில்லுங்கள்...

வில்லை வளைக்க வந்த இராமன் போல், நீர் என் கண்ணுக்குத் தெரிகிறீர்!

(விஷ்ணுசித்தர் பொற்கிழிக்குக் கீழே போய், பவ்யமாகக் கை கட்
நிற்கிறார்.)

*விஷ்ணுசித்தர் :* மன்னரின் கேள்வி என்று நால்
கேள்விப்பட்டது...

*மன்னன் :* மறுமைக்காக, இம்மையிலே செய்
வேண்டியது என்ன?

(இதைக் கேட்கின்ற விஷ்ணுசித்தரின் முகத்தில் தெய்வீக ஒள
தெரிகிறது.

எங்கிருந்தோ மணியோசை கேட்கிறது.

விஷ்ணு சகஸ்ர நாம ஸ்தோத்திரம் கேட்கிறது.)

*விஷ்ணுசித்தர் :* மன்னா! இதற்கான விளக்கத்தை
கண்ணன் கீதையிலே சொல்லியிருக்கிறார்!

## காட்சி – 44

*குருக்ஷேத்திர யுத்த பூமி*

(தேரில் இருந்தபடி, பகவான் கிருஷ்ணன், அர்ச்சுனனுக்கு
உபதேசம் செய்கிறான்.

கண்ணன் விளக்கம் அளிக்கும்பொழுது, அந்தப் பொருளைத்
தருகின்ற கீதையின் சுலோகங்கள், பின்னணியாக, இசையோடு
பாடப்பெறுகின்றன.)

*கண்ணன் :* அர்ச்சுனா! எதைச் செய்கின்றாயோ
எதைப் புசிக்கின்றாயோ, எதை ஹோமம்
செய்கின்றாயோ, எதைத் தானம் செய்கின்றாயோ
எந்தத் தவம் செய்கின்றாயோ, அதை எனக்கு
அர்ப்பணமாகச் செய்!

*யாராய் இருந்தாலும், என்னைச் சரணடைந்தவர்*
*உயர்ந்த கதியை நிச்சயமாய்ப் பெறுவர்.*

*பாரதா! எவ்வகையாலும் என்னையே சரணடை வாய்!*

*என் அருளால், ஒப்பு உயர்வற்ற சாந்தியையும்*
*அழிவில்லாத பதவியையும் அடைவாய்!*

# காட்சி – 45

*அரசவை*

***விஷ்ணுசித்தர் :*** *இவை, என் பகவான் அர்ச்சுனனுக்கு உபதேசித்தவை!*

*கர்ம பலனைக் கருதாது, அவனே சரண் என்று இருந்தால், இம்மையிலே சஞ்சலம் இல்லை! மறுமைக்கான சம்பத்தும் அதுதான்!*

(இவ்வாறு கூறியவுடன், பொற்கிழி அறுபட்டு, விஷ்ணுசித்தரின் கைகளில் விழுகிறது.

மன்னரும் மற்றவர்களும் அவரைக் கை குவித்து வணங்குகின்றனர்.)

***ராஜகுரு :*** *விஷ்ணுசித்தர்...!*

(இவ்வாறுப் பெருங் குரலெடுத்துக் கூவுகிறார்.)

***அவையோர் :*** *வாழ்க!*

***ராஜகுரு :*** *விஷ்ணுசித்தர்!*

***அவையோர் :*** *வாழ்க!*

***ராஜகுரு :*** *விஷ்ணுசித்தர்!*

***அவையோர் :*** *வாழ்க!*

***ராஜகுரு :*** மன்னா! அற்புதமாக விளக்கம் அளித்த இந்த அற்புதருக்கு, பெருமாளின் அருமைத் தூதருக்கு, மறைபட்டுக் கிடந்த மறைமொழியை, இந்த மன்றத்திலே முழங்கி, நம்மையெல்லாம் உய்வித்த இந்த உத்தமர்க்கு, அறுபடாத பொற்கிழியை, விரைந்து அறுத்த வித்தகர்க்கு, 'விரைந்து கிழியறுத்தான்' என்றும், 'பட்டர் பிரான்' என்றும், விருதுகள் வழங்கும்படி, மாமன்னரைக் கேட்டுக் கொள்கிறேன்.

***மன்னன் :*** *விரைந்து கிழியறுத்த விஷ்ணுசித்தர்...*

*அவையோர் :* வாழ்க!

*மன்னன் :* எங்கள் ப ர்பிரான்...

*அவையோர் :* வாழ்க!

(கை கூப்பியபடி, அவையடக்கத்தோடு நின்று, இ பாராட்டுக்களை ஏற்றுக் கொண்டிருக்கிறார் விஷ்ணுசித்த

## காட்சி – 46

*வில்லிபுத்தூர் வீதி*

(கையில் பூக்குடலையோடு பெருமையோடு நடந்து செ கொண்டிருக்கிறாள் பத்மா.

வீடுகளில் இருந்து வெளிப்படுகின்ற பெண்கள், பத்ம விழுந்து கும்பிடுகின்றனர்.)

*பத்மா :* அன்றைக்கு ஏளனமாகப் பேசினீர்க என் அகத்துக்காரரர் பெருமை, இப்பொ தெரிகிறதா?

ஆழமான நீர்நிலை அமைதியாகத்த இருக்கும்.

அது அடக்கம்! முடக்கமல்ல!

ஆமாம் - என்னை ஏன் விழு சேவிக்கிறீர்கள்?

அவரைத்தான் விழுந்து சேவிக்க வேண்டு

*ஒருத்தி :* பத்மா! நீ வேறு, அவர் வேறா?

*இன்னொருத்தி :* இந்தப் பொற்கிளியைத் தொ புண்ணியம், அவர்க்கு அந்தப் பொற் கிடைத்திருக்கிறது!

*மற்றொருத்தி :* இனிமேல் நீ பூக்குடலையே வீதியிலே வந்துகொண்டிருக்க வேண்டாம்.

*பத்மா :* இந்தக் கைங்கர்யத்தை நிறுத்தச் சொல்கிறாயா?

*மற்றொருத்தி :* பல்லக்கில் கோயிலுக்கு வரலாமே என்று சொன்னேன்.

*பத்மா :* நானும் அவரும் பல்லக்கில் வரும்பொழுது, எப்படி எப்படிப் பார்க்காதீர்கள்!

அவர் மிகவும் நாணப்படுவார்!

*வேறொரு பெண் :* மதுரை மன்னர் விருதுகள் கொடுத்து கௌரவித்திருக்கிறாரே!

*பத்மா :* இந்த விருதுகளை விட, என் வாயால் பாராட்டுதல் கிடைப்பதை, அவர் பெரிதாக எண்ணுவார்.

தாயாரின் பாராட்டுத்தானே, பெருமாளுக்கு மிகவும் உகப்பாக இருக்கும்.

*மற்றொரு பெண் :* உன் அகத்துக்காரரை, யானை மேல் அமர வைத்து, மதுரை நகர் வீதிகளிலே, ஊர்வலம் காணப் போகிறார்களாமே!

*பத்மா :* இதற்காக இந்திரன், தன்னுடைய ஐராவதம் என்னும் யானையைக் கேட்டால் கொடுத்திருப்பான்.

மதுரை மன்னன் கேட்கவில்லை போலும்... சரி... நான் கோயிலுக்குப் போகிறேன்.

இப்படித் தினசரி, என்னை விழுந்து சேவிக்காதீர்கள்!

தாயார் மஹாலட்சுமியாக, என்னை நீங்கள் பார்ப்பதானால், அதை மனதோடு வைத்துக் கொள்ளுங்கள்!

மரியாதையை இப்படி வெளிப்படுத்தி, என்னைத் தர்மசங்கடத்தில் ஆழ்த்தி விடாதீர்கள்!

(இவ்வாறு கூறிவிட்டுப் பத்மா, அங்கிருந்து நடக்கிறாள்.)

## காட்சி – 47

*மதுரை நகர்வீதி*

(மதுரை நகர் வீதியிலே, முரசு முழங்கிட, யானைமேல் விஷ்ணுசித்தர் அமர்ந்திருந்து, ஊர்வலமாக வருகிறார்.

மக்கள் திரண்டிருந்து, கை குவித்து, அவரைச் சேவிக்கின்றனர்.)

## காட்சி – 48

*திருப்பாற்கடல்*

*பகவான் :* *பார்த்தாயா பூதேவி!*

*யானை மேல் அமர்ந்திருக்கும் இந்த விஷ்ணுசித்தர், நான் அமர்ந்து செல்லும் கருட பகவானின் அம்சம்.*

*பூமியைப் புனிதமாக்க அவதரித்திருக்கும் அருட் செல்வர்.*

*அவர் ஊர்வலமாகப் போவதைக் காணக் கருடன், பூலோகத்திற்குப் புறப்படுகிறான்.*

*அவன் மீது அமர்ந்து சென்றால், எனக்கும் அந்தத் திருக்கோலத்தைப் பக்கத்தில் இருந்து பார்த்த திருப்தி கிடைக்கும்.*

*எண்திசையிலும் கடலையே பார்த்துப் பார்த்துப் பகவானுக்கே சலிப்பு வந்து விட்டது.*

*சற்றுக் கண்ணார அதைக் கண்டு விட்டு வருகிறேன்.*

*எனக்குப் பூ இடுதலையே புண்ணியமாகக் கருதும் அந்தப் புண்ணியருக்குத் தரிசனம் அளிப்பது, எனக்கு உகப்பான காரியம்.*

*ஸ்ரீதேவி :* *உங்களோடு நானும் வருகிறேன்.*

*பகவான் :* நீயில்லாமல் நான் போனால், என்னைப் பகவானாகப் பார்க்க மாட்டார்கள்.

திருமால் என்று, திருவான உன்னைத்தான் முதலில் சொல்கிறார்கள்.

## காட்சி – 49

*மதுரை நகர் வீதி*

(விஷ்ணுசித்தர் யானை மேல் ஊர்வலமாக வந்து கொண்டிருக்கிறார்.

திடீரென வானிலிருந்து சங்கொலி கேட்கிறது. வானிலே பேரொளி தெரிகிறது.

எல்லோரும் வானையே பார்க்கின்றனர்.

கருட வாகனனாகத் தாயார் லட்சுமி தேவியோடு, பகவான் காட்சி தருகிறார்.

விஷ்ணுசித்தர். இந்தத் தரிசனம் கண்டு,

மெய்சிலிர்த்துப் போகிறார்.

தலைமேல் கை வைத்துச் சேவிக்கிறார். கண்ணீர் பெருகப் புலம்புகிறார்.)

*விஷ்ணுசித்தர் :* இந்தக் கலியுகத்திலே, பகவான் தாயாரோடு இங்கு இப்படி வந்து தோன்றிவி ' ı ாரே!

எம்பெருமானுக்கு எந்தத் தீங்கும் ஏற்படாமல் இருக்க வேண்டுமே!

கிருத யுகத்தில் தர்மத்திற்கு நாலு பாதங்கள். திரேதாயுகத்தில் தர்மத்திற்கு மூன்று பாதங்கள். துவாபரயுகத்தில் தர்மத்திற்கு இரண்டு பாதங்கள்.

இந்தக் கலியுகத்தில் தர்மத்திற்கு அழிந்து கொண்டிருக்கும் ஒரே பாதம்!

இங்கு உன் பொற்பாதம் படலாமா?

பாற்கடலில் இருக்கின்ற அமிழ்தே!

பாழ்பட்டுப் போன இந்தப் பூமிக்கு நீ இப்படி வரலாமா?

உனக்கு ஓர் ஊறு ஏற்பட்டால், உயிர்கள் எல்லாம் என்ன ஆவது?

கண்ணேறுபட்டு, உன் பவளமேனி வாடிவிட்டால், இந்தப் பாவியால் அதைத் தாங்கிக் கொள்ள முடியுமா?

தந்தைக்காக மகுடம் துறந்தாய் நீ!

சொத்துக்காகத் தந்தையைத் துறக்கிற காலம் இது!

தவமிருந்து பிள்ளை பெற்ற காலம் போய்விட்டது!

பெற்ற பிள்ளையை விலை பேசி விற்கின்ற பேரழிவுக் காலமாயிற்றே இது!

தெய்வத்திற்குப் படைத்ததெல்லாம் பழங்கதை!

தெய்வத்திடமிருந்து திருடுகின்ற கொடுமை மலிந்திருக்கும் பூமி இது!

நெருப்பிற்குள் குதித்ததைப் போல, உன் செந்தாமரைக் கால்களோடு, இங்கு வந்து நிற்கிறாயே!

உனக்கோர் குறை ஏற்படாமல், நீ பல்லாண்டு வாழ வேண்டுமப்பா!

நீ மல்லர்களை வென்றவன்!

இந்தக் கலியுகத் தீமையையும் வென்று நீ நலமாகத் திரும்ப வேண்டுமப்பா!

உன் செவ்வடிதானே எங்களுக்குக் காப்பு! காப்புக்கே வருத்தம் வந்தால், அடியோங்கள் என்ன ஆவோம்?

நீ பல்லாண்டு பல்லாண்டு, எங்களோடு பிரிவின்றி வாழ வேண்டும்!

உன் வல மார்பினில் வாழ்கின்ற தாயாரும், உன் வலக்கைச் சக்கரமும், உன் பெருமையை முழங்கும் பாஞ்சசன்னியம் என்னும் சங்கும், பல்லாண்டு வாழ வேண்டும்!

எங்களை வாழ்த்த வேண்டிய உன்னை, சிறியவன் நான் வாழ்த்துகிறேன்!

ஆசி பெற வேண்டியவன், அனல்பட்ட நெய்யாக உருகி உன்னை வாழ்த்துகிறேன்!

இது முறையா என்று எனக்குத் தெரியாது!

இப்படி உன்னை வாழ்த்தா விட்டால், என் மனம் அமைதி பெறாது!;என் நாவில் நீர் சுரக்காது!; என் உ ட லில் ஜீவன் இருக்காது!

(இசையோடு பாடுகிறார்.)

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன்
சேவடி செவ்வி திருக் காப்பு"

"அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின் வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத் துறையும் சுடர்
ஆழியும் பல்லாண்டு
படை போர் புக்கு முழங்கும் அப் பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே"

(விஷ்ணுசித்தர் உணர்ச்சிக்குமுறலோடு, யானை மணிகளைத் தாளமாகக் கொண்டு, இப்பாசுரங்களைப் பாடும்பொழுது, தேவர்கள் வானிலே திரண்டு வந்து, கை குவித்து நின்று, பக்தியோடு கேட்கின்றனர்.

மதுரை நகர் மக்களும், கல்லால் அடித்த சிலை போல் நின்று, இந்
அற்புதத்தைக் காணுகின்றனர்.)

*அசரீரிக்குரல் :* *விஷ்ணுசித்தரே! இது போன்
அமிழ்தான பாடல்களைப்பாடி, ஆழ்வார் ஆகுவீர்*

*பகவானையே ஆசீர்வதித்துப் பல்லாண்டு
பாடியதால், பெரிய ஆழ்வார் என்று பெய
பெறுவீர்!*

*என்னைக் குழந்தையாக்கி வாழ்த்து
தந்தையே!*

*உம்முடைய கொஞ்சு தமிழ், எனக்கு இன்னு
வேண்டும்! வேண்டும்!*

*என்னைக் குழந்தையாக்கி வளர்க்கு
பிள்ளைத் தமிழ், எனக்கு வேண்டுமப்பா!*

(பகவான் மறைந்துவிட, விஷ்ணுசித்தர், கண்மூடி, மௌனமாக
அழுகிறார்.

அவர் கண்களிலிருந்து, கண்ணீர் வழிகிறது.)

## காட்சி – 50

*வில்லிபுத்தூர் - பெரியாழ்வாரின் இல்லம்*

*பத்மா :* *கிடைத்த பொற்கிழியைக் கோயிலுக்கு
கொடுத்து விட்டு வந்து நிற்கிறீர்களே!*

*பகவான் தரிசனமும், பெரியாழ்வார் என்ற
பெயரும் கிடைத்து விட்டால், நம் இல்லத்திலே
உலை கொதித்து விடுமா?*

*லட்சுமித் தாயார் கண்ணைத் திறந்து
பார்க்கும்போது, அதை வேண்டாமென்று
யாராவது சொல்வார்களா?*

*கோயில் கைங்கர்யம் செய்பவர்கள், எந்தச்
சுகமும் அனுபவிக்கக் கூடாது என்று விதி
இருக்கிறதா என்ன?*

குழந்தைச் செல்வந்தான் இல்லை!; பகவான் கொடுத்த பொருட் செல்வத்தையும் இப்படித் தாரை வார்க்கலாமா?

பகவானுக்குப் பூ இட்டு மகிழ்பவர், மனையாளுக்குப் பொன் இட்டுப் பார்ப்பது தவறா?

அந்த ஆசையே, உங்களுக்கு இல்லாமற் போய்விட்டதே!

உங்களுக்கு இல்லாத ஆசையை, என் நெஞ்சிலே வளரவி' ı து என் தப்புத்தான்!

உங்களை நான் புரிந்து கொள்ளவில்லையே என்றுதான் புலம்புகிறேன்.

**பெரியாழ்வார் :** பத்மா! மனதிலே பகவான் இருந்தால், நம் கண்ணுக்கு எல்லாம் நிறைவாகத் தெரியும்.

மனதிலிருந்து பகவான் மறைந்து விட்டால், எல்லாம் குறையாகத் தெரியும்.

பொற்கிழி, வணிகனுக்குத்தான் பயன்படும்.

நாம் வேதம் ஓதும் அடியார்கள். நமக்குப் பொற்கிழியும் வேற்படையும் தேவையில்லை. நமக்குக் குழந்தை இல்லையே என்று ஏங்கினாய்!

ஒவ்வொருவருக்கும் சேர வேண்டிய சொத்துத்தான் சேரும்.

செய்த வினைக்கு விளைச்சலைக் காண்கிறோம்.

பத்மா! அவனைச் சரண் என்று அடைந்த பிற்பாடு, இன்ப துன்பங்களைப் பகுத்துப் பார்க்கலாமா?

(இப்பொழுது ஊர் மக்கள், அவர் வீட்டு வாயிலில் திரண்டு வந்து நிற்கின்றனர்.)

**ஒருவர் :** பெரியாழ்வ:ரே! நீங்கள் பகவானுக்குப் பல்லாண்டு பாடுவதை, இந்த ஊர் மக்களாகிய நாங்கள் கேட்க வேண்டாமா?

சொந்த ஊர் மக்கள்! - இந்தப் பந்தத்தோடு கேட்கிறோம்.

*பெரியாழ்வார் :* எல்லாரும் ஒரு மனதாகக் கேட்டால் பாடுகிறேன்.

*மற்றொருவர் :* எல்லாரும்தான் கேட்கிறோம் சுவாமி!

*வேறொருவர் :* அதற்காகத்தான், உங்கள் இல்லத்தின் முன்பு, திரளாக வந்து நிற்கிறோம்!

*பிறிதொருவர் :* அமிழ்தை வேண்டாமென்று சொல்கின்ற விநோதப் பிறவி, இங்கு யாருமே இல்லை! பாடுங்கள் சுவாமி...

*பெரியாழ்வார் :* ஓர் ஆத்மா உளமார இதற்கு ஒப்புதல் தரவில்லை.

*பத்மா :* என்னைத்தானே சொல்கிறீர்கள்!

பகவானுக்குப் பல்லாண்டு பாட வேண்டாம் என்று நான் சொல்லவில்லை.

*பெரியாழ்வார் :* இதை மனமாரச் சொல்லவேண்டும்.

*பத்மா :* "எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன்
ஏழ்படி கால் தொடங்கி..."

இதோ அடியெடுத்தும் கொடுத்து விட்டேன். போதுமா? பாடுங்கள்...

*விஷ்ணுசித்தர் :* ஆஹா! அற்புதமான ஆரம்பம்! எந்தை தந்தை தந்தை தந்தை இப்படி ஏழுதலைமுறையாக, உனக்கே தொண்டு செய்கிறோம்.

திருவோணத் திருவிழவில், அழகிய அந்தி மாலையில், நரசிம்மமாய்த் தோன்றி, இரணியனை அழித்தவனே!

உன் வருத்தம் தீரப் பல்லாண்டு பாடுகிறோம்.

(இசையோடு பாடுகிறார்.)

"எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன்
ஏழ்படி கால் தொடங்கி
வந்து வழிவழி ஆட் செய்கின்றோம்; திரு
வோணத் திருவிழவில்
அந்தியம் போதில் அரியுருவாகி
அரியை அழித்தவனை
பந்தனை தீரப் பல்லாண்டு பல்லாயிரத்
தாண்டென்று பாடுதுமே"

## காட்சி – 51

*ஒரு வீடு*

(வீட்டின் முன்பு அமர்ந்து கொண்டு, ஒரு சிறுவன் புல்லாங்குழல் எடுத்து ஊதுகிறான்.

அந்த இசை கேட்டு, அவ்விடத்திற்கு ஓடி வருகிறார் பெரியாழ்வார்.)

*பெரியாழ்வார் :* *ஆஹா! மயக்கும் இசை! என் மணிவண்ணனின் புல்லாங்குழல் இசை!*

*என் கோவிந்தன் குழல் கொண்டு ஊதினது போல் இருக்கிறது.*

*நிறுத்தாதே அப்பா - காற்றோடு அமுதத்தைக் கலந்து வீசு!*

*செவி வழியே, அந்த இன்பத்தைச் சேர்த்துக் கொள்கிறேன்.*

*என் கார்மேனி வண்ணனை, என் நெஞ்சில் நிறைத்துக் கொள்ள, உன் கானம் உதவுகிறது.*

(இப்பொழுது வீட்டினுள் இருந்து, அந்தச் சிறுவனின் அப்பா, கோபமாக வெளியே வருகிறார். சிறுவனை அடிக்கிறார்.)

*சிறுவன் :* *அப்பா!*

*அப்பா :* *தண்ணீர் மொண்டு வரச் சொன்னால், குழலா ஊதிக் கொண்டிருக்கிறாய்?*

இந்தக் குழலை உடைத்தால்தான் ஒழுங்காக இருப்பாய்.

(புல்லாங்குழலை முறித்து விடுகிறார். சிறுவன் கையில் குடத்தைக் கொடுக்கிறார்.)

*ஆசிரியர் :* போடா...

(பெரியாழ்வாரைப் பார்த்து)

சுவாமி! இது கோகுலம் இல்லை!

இவனும் கண்ணன் இல்லை!

(இவ்வாறு கூறிவிட்டு, வீட்டினுட் சென்று விடுகிறார்.

முறிந்து கிடக்கும் புல்லாங்குழலைப் பார்த்துவிட்டுக் கண்ணீரோடு அங்கிருந்து நடக்கிறார் பெரியாழ்வார்.)

## காட்சி – 52

*பெரியாழ்வாரின் இல்லம்*

***பெரியாழ்வார் :*** என் கண்ணனின் குழலோசை கேட்காமல்,இனிமேல் நான் உண்ண மாட்டேன்.

***பத்மா :*** என்ன இது! குழந்தை மாதிரிப் பேசுகிறீர்கள்!

கண்ணன், இந்தப் பெரியாழ்வார் இல்லத்திற்கு வந்து, பெரியவர் முன்பு அமர்ந்து, புல்லாங்குழல் ஊதிக் காட்டுவானா?

பகவானை, இப்படிப் பணியாள் போலக் கூப்பிட்டு, வேலை வாங்குவதுதான் பக்தியா?

***பெரியாழ்வார் :*** அவன் இசையைப் பருகினபோது, தடை ஏற்பட்டு விட்டது.

என் உள்ளமும் அதனால் உடைபட்டுப் போய்விட்டது.

***பத்மா :*** அந்தக் கண்ணனின் இசையை எங்கே கேட்பீர்கள்?

*அந்தச் சிறுவன் காளியன்தான், புல்லாங் குழலை எடுத்து ஊதியிருக்கிறான்.*

***பெரியாழ்வார் :*** *அந்த நாதத்திலே, நான் என் கண்ணனையே பார்த்தேன்!*

***பத்மா :*** *அப்படியா! உங்களுக்குப் புல்லாங்குழல் இசை வேண்டும் - அவ்வளவுதானே!*

(பத்மா அங்கிருக்கும் ஒரு புல்லாங்குழலை எடுத்து ஊதிக் காட்டுகிறாள்.

பெரியாழ்வார், முகம் சுளித்தபடி, தன் இரு காதுகளையும், கைகளால் மூடிக் கொள்கிறார்.)

***பெரியாழ்வார் :*** *கம்ஸன், புல்லாங்குழல் எடுத்து ஊதினால், இப்படித்தான் இருக்கும்!*

*பத்மா! அழுகிற குழந்தைக்குத்தான் பால் கிடைக்கும்.*

*நான் அழுகிறேன் இப்பொழுது - சொத்து சுகத்திற்காக அல்ல; மாட மாளிகைக்காக அல்ல; அவன் வேணு கானத்திற்காக அழுகிறேன்.*

*வெண்ணெய்க்காக அழுதவன் அவன்.*

*என் விண்ணப்பத்தை அவன் நிறைவேற்ற மாட்டானா?*

*அவன் வேய்ங்குழல் இசை கேட்கும்வரை, நான் ஒரு துளிநீர்கூட அருந்த மாட்டேன்!*

*என் உ ௱ ல் விழுந்தாலும், இந்த உறுதி தளராது!*

***பத்மா :*** *(அழுதபடி) பித்தரைப் போல் பேசுகிறீர்களே!*

*பக்தியில் இதுவும் சேர்த்தியா? என்னை இப்படித் தவிக்க வைத்துப் பார்ப்பது, என்ன தர்மம்?*

*உணவை மறுத்து இருந்தால், அற்புதம் நிகழ்ந்து விடுமா?*

*என் மங்கலம் குலைந்து விடாதா?*

## காட்சி – 53

*வில்லிபுத்தூர் வீதி*

(பூக்குடலையோடு சோர்வோடு நடந்து செல்கிறார் பெரியாழ்வார்.

அவரை இரக்கத்தோடு, அவ்வழியே செல்பவர்கள் பார்க்கின்றனர்.)

*ஒருவர் :* பெரியாழ்வார் சாப்பிட்டுப் பத்து நாட்கள் ஆகி விட்டனவாம்!

இன்னும் எத்தனை நாட்களுக்கு இந்த உ ம்பு தாங்கும் என்று தெரியவில்லை.

*மற்றொருவர் :* மதுரையிலே பகவானின் தரிசனம் கிடைத்தது போல், இங்கும் அற்புதம் நிகழாதா?

*முன்னவர் :* நம் நினைப்பு இது!

அவன் நினைப்பு எதுவோ?

உயிரைப் பணயம் வைத்து ஆடுகின்ற பெரியாழ்வார், இந்த ஆட்டத்திலே தோற்று விடுவாரோ என்று அஞ்சுகிறேன்.

## காட்சி – 54

*பெரியாழ்வார் இல்லம்*

(வீட்டில் தளர்ந்து சாய்ந்திருக்கிறார் பெரியாழ்வார்.)

*பத்மா :* (வேதனையோடு) பகவானே! எனக்கு வேற எந்தச் சுகமும் வேண்டாம்.

இவர் தீர்க்காயுசா இருந்தால் போதும்.

பல்லக்கிலே, வீதியிலே போக, இனிமேல் நான் ஆசைப்பட மாட்டேன்.

மங்கலமாக என்னை வீதியிலே நடமாட விடப்பா - அது போதும்!

இவர் வைராக்கியத்தோடு, என் வாழ்க்கையே பின்னிக்கிடக்கிறது.

ஒரு முடிவைச் சொல்லுப்பா! அதை எங்களுக்கு ஒரு விடிவாக் காட்டப்பா!

***புல்லாங்குழல் வித்வான் :*** (அங்கு வந்தபடி) அம்மா! நான் ஒரு புல்லாங்குழல் வித்வான்.

என்னைத் தேடினீர்களாமே?

***பத்மா :*** வாருங்கள்... வாருங்கள்..

உ ;ˆ காருங்கள்...

உங்களுக்குப் புல்லாங்குழலில் நல்ல தேர்ச்சி உண்டல்லவா?

***வித்வான் :*** என்ன இப்படிக் கேட்டு வி;ˆ ¹º ர்கள்!

பிருந்தாவனத்துக் கண்ணன் இசையை, கலியுகத்தில் என்னிடம்தான் கேட்க வேண்டும்.

என்னுடைய புல்லாங்குழல் இசை கேட்டு, பசு, கறப்பார் இல்லாமல், பால் சொரியும்.

***பத்மா :*** மிக்க மகிழ்ச்சி. என் மாங்கல்யத்தைக் காப்பாற்ற வந்து சேர்ந்து வி;ˆ ¹º ர்கள்.

கொஞ்சம் வாசியுங்கள் - உங்கள் வாசிப்பு, இவர் நெஞ்சிலே இனிமையைப் பாய்ச்ச வேண்டும்.

என் கண்ணனின் வேணுகானம் இதுதான்! இதுதான்! - என்று இவர் எழுந்து கூத்தாட வேண்டும்.

***வித்வான் :*** என் இசை, உயிரற்ற உடலையும் உட்கார வைத்து விடும்.

***பத்மா :*** அமங்கலமாகப் பேசாதீர்கள்.

வாசியுங்கள்...

(புல்லாங்குழல் வித்வான், மூச்சுப் பிடித்துப் புல்லாங்குழல் ஊதுகிறான்.

வெறும் காற்றுத்தான் வருகிறதே தவிர, இசை கேட்கப்படவில்லை.

மீண்டும் மீண்டும் முயன்றும், இசை ஒலி கேட்கப்படாததால், பயந்து போய், அங்கிருந்து ஓட்டம் பிடிக்கிறான்.)

## காட்சி – 55

*திருப்பாற்கடல்*

(பூ தேவி வேகமாகப் பாற்கடலுக்கு வருகிறாள்.)

*பகவான் :* (பூ தேவியைப் பார்த்து) *வந்து விட்டாயா? உன்னைத்தான் எதிர்ப்பார்த்தேன்.*

*பூதேவி :* *பெரிய்ய... ஆழ்வார் என்ற விருதை வழங்கிவிட்டு, இப்படி அல்லற்படுத்தக் கூடாது!*

*ஸ்ரீதேவி :* *ஆமாம் - அவர் யாசிப்பது வேணுகானத்தை!*

*குழல் எடுத்து ஊதி, அவரைக் குளிர்வித்தால் என்ன?*

*நம்பியவர்களெல்லாம் இப்படி வெம்பிக் கொண்டிருந்தால், இந்தப் பாற்கடலே குமுறிக் கொந்தளித்து விடும்!*

*பகவான் :* *சூடுபட்டு நெருப்புத் துடிக்காது!*

*என்னைச் சரண் அடைந்து விட்ட பெரியாழ்வார், இன்ப துன்பங்களைச் சமமாகவே பாவிப்பார்!*

*துன்பம் அவருக்கில்லை!*

*சோதனை ஆழ்வாருக்கில்லை!; அவர் மனையாளுக்கு!*

*அவள் நன்மை பெறவே, மனநலம் பெறவே, இந்த நாடகம்!*

**பூதேவி :** ஆழ்வாரின் உயிர் இப்பொழுது பறந்து செல்லத் துடித்துக் கொண்டிருக்கிறது.

**பகவான் :** விடுவேனா? அவரால், எனக்கும் தமிழுக்கும் எவ்வளவு ஏற்றம் கிடைக்கப் போகிறது!

அதோ, என் குழலோசை, வில்லிபுத்தூரில் கேட்டுவி' ı து இப்போது!

திருப்திதானே?

## காட்சி – 56

*வில்லிபுத்தூர் - பெரியாழ்வாரின் இல்லம்*

(தளர்வோடு படுத்திருக்கும் பெரியாழ்வாரின் செவிகளுக்கு, மதுரமான புல்லாங்குழல் இசை கேட்கிறது.

புத்துணர்வு பெற்றவர் போல் எழுந்திருக்கிறார்.

அவர் மனையாளும் இந்த இசையைக் கேட்டு, மெய்ச்சிலிர்ப்போடு கை குவித்துச் சேவிக்கிறாள்.

இசையை நாடி, வீட்டை விட்டு உகப்போடு வெளியேறுகிறார் பெரியாழ்வார்.

மனையாளும் உடன் செல்கிறாள்.)

## காட்சி – 57

*வில்லிபுத்தூர் வீதி*

(இசை எங்கிருந்து கேட்கிறது? என்று நாடித் தேடி, வீதியிலே விரைந்து கொண்டிருக்கிறார் பெரியாழ்வார்.

பத்மாவும் கணவரோடு உடன் ஓடிச் சென்று கொண்டிருக்கிறாள்.

வில்லிபுத்தூர் மக்களும், இந்த அற்புத இசை கேட்டு, அதன் பிறப்பிடத்தைத் தெரிந்து கொள்ள, வீதியிலே திரள்கின்றனர்.)

## காட்சி – 58

*வெட்டவெளி*

(பொட்டல் வெளியில், பெரியாழ்வாரும் மற்றவர்களும் வந்து நிற்கின்றனர். வானையே உற்றுப் பார்க்கின்றனர். அங்கிருந்துதான் இசை கேட்பது தெரிகிறது.

வானத்தைப் பார்க்கின்ற பெரியாழ்வாரின் கண்களுக்குக் கண்ணன் குழல் ஊதி நிற்கின்ற திருக்கோலம், அந்தத் தெய்வீகக் கோலம் தெரிகின்றது.

கூத்தாடுகிறார் பெரியாழ்வார்!)

***பெரியாழ்வார் :*** *என் கண்ணன், என் மன்னன், குழல் ஊதி நிற்கின்ற திருக்கோலம், தெய்வீகக் கோலம், என் கண்களுக்குத் தெரிகிறது!*

*அவன் இசையைப் பேசுவேனா? அவன் அங்கங்கள் அபிநயிக்கும் அந்த அழகைப் பேசுவேனா?*

*அவன் சிறு விரல்கள் அசையும் அழகு, அவன் சிவந்த கண்கள் கோணுகின்ற எழில், அவன் சிவந்த வாய் காற்றைக் கொப்புளிக்கிற குதூகலம், அவன் புருவங்கள் வளைகின்ற வனப்பு - இந்த ஓவியங்களையெல்லாம் இப்போது நான் காண்கிறேனே! பாருங்கள்! அவன் இசை கேட்டுப் பறவைகள் தங்கள் கூடுவிட்டு இங்கு வந்து சூழ்ந்து விட்டன!*

*கறவைப் பசுக்கள் இங்கு ஓடி வந்து, கால் பரப்பித் தலை கவிழ்ந்து, செவியைக் கூட ஆட்டாது, அவன் இசையில் கிறங்கிக் கிடக்கின்றன!*

*மாதவா! எங்கள் மனம் மகிழச் செய்த கோவிந்தா!*

*உனக்கு இனிப் பூமாலையோடு பாமாலையும் சூட்டி மகிழ்வேன்.*

தாயோடு ஆசையாகப் பேசும் குழந்தைபோல, அடியேனும் பேசுகிறேன்.

தாயாகி, என் பேச்சையும் ஏற்றுக் கொள்ளப்பா!

(இசையோடு பாடுகிறார்.)

"சிறு விரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிக்கக்
குறுவெயர்ப் புருவம் குடிலப்பக்
கோவிந்தன் குழல்கொடு ஊதினபோது
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக்
கவிழ்ந்து இறங்கிச் செவி ஆட்டகில்லாவே"

*பத்மா :* எங்கள் கண்களுக்குப் பகவான் தெரிய வில்லையே!

*கூட்டத்தில் ஒருவர் :* சுவாமி! பகவான் எப்படி இருக்கிறார் என்று சொல்லுங்கள் சுவாமி!

*இன்னொருவர் :* பார்த்ததைப் பாசுரமாகப் பேசி விடுகிறீர்கள்! அந்தப் பேரின்பத்தைப் பேசுங்கள் சுவாமி!

*பெரியாழ்வார் :* மாதவன், இப்பொழுது இதோ மண்ணிலே வந்து குழல் ஊதிக் கொண்டிருக்கிறான்.

கரிய கண்ணை உடைய மயில் தோகையைத் திருமுடிக்குச் சூடியிருக்கிறான்.

இடையிலே பொன்னாடை உடுத்தியிருக்கிறான்.

அணிகலன்களைத் திருமேனிக்குச் சாத்தி யிருக்கிறான்.

இந்த அழகனுக்கு இவை அழகூட்டுமா? - இல்லை - இவனால் இவை அழகு பெறும்!

இதோ, அவன் பக்கம் நிற்கும் மரங்கள்கூட, அவன் இசை கேட்டு மயங்குகின்றன.

*அவன் நிற்கும் பக்கம் கொம்புகளைத் தாழ்த்திச் சேவிக்கின்றன; மலர் இட்டு அர்ச்சிக்கின்றன; தேன் துளிகளையும் அவன் மேல் சிதறுகின்றன.*

(இசையோடு பாடுகிறார்.)

"கருங்கண் தோகை மயிற்பீலி அணிந்து
கட்டி நன்கு உடுத்த பீதக ஆடை
அருங்கல உருவின் ஆயர் பெருமான்
அவனொருவன் குழல் ஊதினபோது
மரங்கள் நின்று மது தாரைகள் பாயும்
மலர்கள் வீழும்; வளர் கொம்புகள் தாழும்;
இரங்கும் கூம்பும் திருமால் நின்றநின்ற
பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே"

(இப்பொழுது புல்லாங்குழல் இசை கேட்கவில்லை)

*பெரியாழ்வார் :* என் மாயவன் மறைந்து விட்டான்.

என் கேசவன் சென்று விட்டான்.

இந்தப் பிறவியை உகப்போடு கழிக்க, இந்த அமுதவெள்ளம் போதுமப்பா!

தும்புருவும் நாரதரும், தங்கள் வீணையை மறக்கச் செய்த உன் வேணுகானத்தை, நாங்கள் கேட்டு விட்டோம்.

கந்தர்வரும் மயங்கும் அந்தக் கானத்தைக் கேட்டு விட்டோம்.

## காட்சி – 59

*வில்லிபுத்தூர் வீதி*

(பூக்குடலையோடு வீதியிலே சென்று கொண்டிருக்கிறார் பெரியாழ்வார்.

எதிர்ப்படுகின்ற ஒரு பெரியவர், தட்டுத் தடுமாறி வந்து ஆழ்வாரை நிறுத்திப் பேசுகிறார்.)

*பெரியவர் :* சுவாமி! அந்தக் கோபாலனின் வேணுகானத்தை இங்கு எல்லோரும் கேட்கும்படிச் செய்து, இந்த வில்லிபுத்தூரைப் பிருந்தாவனம் ஆக்கிவிட்டீர்கள்.

நான் உய்வு பெறவும், என் காதுக்குச் சில மந்திரச் சொற்களைச் சொல்லுங்கள் சுவாமி!

*பெரியாழ்வார் :* ஐயா! உங்கள் மனத் துன்பம் என்ன?

*பெரியவர் :* எனக்கு வயதாகிக் கொண்டே போகிறது. கோயிலுக்குச் செல்வதற்குக்கூட இப்பொழுது என்னால் இயலவில்லை.

என் பொருளுக்காகத்தான், என் உறவினர்கள், என்னைச் சுற்றி இருக்கின்றனர்.

இம்மையிலே சுகமில்லை. மறுமையிலும் சுகப்படுவேனோ என்று அச்சமாக இருக்கிறது.

எமன் என்னை அழைத்துப் போவதற்கு முன்பு, இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும் சுவாமி?

உங்களைப் போன்று கைங்கர்யமெல்லாம் அடியேனால் செய்ய இயலாது.

எமதூதர்களால் எனக்கு இடர் ஏற்படுமோ என்று அஞ்சுகிறேன்.

*பெரியாழ்வார் :* ஐயா! சேமித்த பொருள் எங்கே? - என்று, நீங்கள் க்ஷீணித்திருக்கும் வேளையில், உறவினர்கள் உங்களைச் சுற்றியிருந்து கேட்பார்கள்.

வாய் திறந்து பேச முடியாது, உயிர் வாதைபட்டுக் கொண்டிருப்பீர்கள் நீங்கள்.

அந்தக் காலம் வருவதற்கு முன்பு, இப்பொழுதே ஒரு கோயில் எழுப்பி விடுங்கள்.

*பெரியவர் :* கோயிலா! நானா? முடியுமா என்னால்?

*பெரியாழ்வார் :* முடியும். உங்கள் உள்ளத்தில் கோயில் எழுப்புங்கள்.

அதில் மாதவனைப் பிரதிஷ்டை செய்யுங்கள்.

ஆர்வம் என்னும் பூ இட்டு, அவனை, உங்கள் நெஞ்சு நெகிழச் சேவியுங்கள்.

அது போதும் - எமதூதர்களால் உங்களுக்கு எந்தத் தீங்கும் வராது.

(இசையோடு பாடுகிறார்.)

"சோர்வினால் பொருள் வைத்தது உண்டாகில்
சொல்லு சொல் என்று சுற்றம் இருந்து
ஆர் வினவிலும் வாய் திறவாதே
அந்த காலம் அடைவதன் முன்னம்
மார்வம் என்பதுஓர் கோயில் அமைத்து
மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வம் என்பது ஓர்பூ இட வல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலும் ஆமே"

(இதைக் கேட்டுப் பெரியவர் கைகுவித்து வணங்குகிறார்.)

## காட்சி – 60

*ஓர் இல்லம்*

(ஓர் இல்லத்தில் பெரியாழ்வார் உபசரிக்கப்பெற்று அமர்ந்திருக்கிறார்.

அவர் முன்பு, பச்சிளம் குழந்தை ஒன்று படுத்திருக்கிறது.

உறவினர்கள் சுற்றி அமர்ந்திருக்கின்றனர்.)

*வீட்டுத் தலைவர் :* (பெரியாழ்வாரை நோக்கி) சுவாமி! தாங்கள் இந்த வீதி வழியாகப் பெருமாளுக்குப் பல்லாண்டு பாடிச் சென்ற பொழுது, இந்தக் குழந்தை பிறந்தது.

இது கேட்ட முதல் ஓசையே, தங்கள் பாசுரந்தான்!

தாங்களே இக் குழந்தைக்கு, ஒரு பெயர் இட்டு அருள வேண்டும்.

*பெரியாழ்வார் :* பகவானைப் பெயரிட்டு அழைக்க, அவன் பெருமையை நினைக்க, நாம் மறந்து விடுவோம் என்றுதான், பெற்ற பிள்ளைகளுக்கு, அவன் பெயரிட்டுப் பகவானை நினைவுபடுத்திக் கொள்கிறோம்; நம் நெஞ்சிலே அவன் உருவைத் தங்க வைத்துக் கொள்கிறோம்.

மானிடச் சாதியில் தோன்றிய மானிடரின் பேர் இட்டு அழைத்தால், மறுமைக்குப் பயன் இல்லை.

மாதவா! கோவிந்தா! - என்று அழைத்தால், அந்தச் சொல்லுக்குப் பயன் உண்டு.

சொல்லுக்குரிய அந்தப் பெருமாள், நம்மிடம் சொல்லாமலே, நம் நெஞ்சிலே புகுந்து விடுவான்.

(இசையோடு பாடுகிறார்.)

"மானிட சாதியில் தோன்றிற்று ஓர் மானிட சாதியை
மானிட சாதியின்பேர் இட்டால் மறுமைக்கு இல்லை
வான் உடை மாதவா! கோவிந்தா! என்று அழைத்தக்கால்
நான் உடை நாராணன் தம் அன்னை நரகம் புகாள்"

*பெரியாழ்வார் :* இந்தக் குழந்தைக்கு மாதவன் என்னும் திருநாமம் இட்டு, அந்தச் சீர் அணிமாலின் பேரருளை யாசித்து வாழ்த்துகிறேன்.

## காட்சி – 61

*திருப்பாற்கடல்*

(பகவானும் ஸ்ரீதேவியும், ஒருவர்மேல் ஒருவர் பூப்பந்து எறிந்து விளையாடிக் கொண்டிருக்கின்றனர்.)

*ஸ்ரீதேவி :* பகவானுக்கு இன்று இந்த விளையாட்டின் மீது நாட்டம் ஏற்பட்டது எதற்கோ?

*பகவான் :* "தேவகி சிங்கத்தைப் பாடிப் பற" என்று பெரியாழ்வார், மகளிர் விளையாட்டைப் பாடிக் கொண்டிருக்கிறார்.

என்னைப் பாடிப் பரவ, இந்
விளையாட்டையும் களமாக்கிக் கொள்கிறார்.

என் நினைவு இன்றி, அவருக்கு வேறு
எண்ணம் இல்லை.

என் பேச்சு இன்றி, அவருக்கு வேறு சொ
இல்லை.

பாடுகிறார் அவர். நாமும் பந்தாடி
கொண்டே அதை அனுபவிப்போம்.

(இப்பொழுது பெரியாழ்வார் இசையோடு பாடுவது, இங்கு
கேட்கிறது.

அந்தத் தாளத்திற்கு ஏற்ப, அவர்கள் பந்து வீசுகின்றனர்)

*பெரியாழ்வாரின் பாட்டு :*

"மாற்றுத் தாய் சென்று வனம் போகே என்றிட
ஈற்றுத்தாய் பின் தொடர்ந்து எம்பிரான் என்று அழ
கூற்றுத்தாய் சொல்லக் கொடியவனம் போன
சீற்றம் இலாதானைப் பாடிப் பற!
சீதை மணாளனைப் பாடிப் பற!"

"பஞ்சவர் தூதனாய்ப் பாரதம் கை செய்து
நஞ்சு உமிழ் நாகம் கிடந்த நற்பொய்கை புக்கு
அஞ்சப் பணத்தின் மேல் பாய்ந்திட்டு அருள் செய்த
அஞ்சன வண்ணனைப் பாடிப் பற!
அசோதை தன் சிங்கத்தைப் பாடிப் பற!"

**பூதேவி :** (அங்கு வந்தபடி) ஆஹா! அற்புதம்! அற்புதம்! பாடலும்அற்புதம்! உங்கள் விளையாடலும் அற்புதம்!

**பகவான் :** அந்தப் பெரியாழ்வார் பாடினால், நான் எழுந்து கூத்தாடுவேன்!

**பூதேவி :** அப்படியொரு வசிய சக்தி, அவரிடம் இருக்கிறதா?

**பகவான் :** என்னையே நினைத்துருகும் அவர், கல்லையும் உருக வைக்கும் கற்கண்டுத் தமிழால், என்னை ஆராதிக்கிறார்.

இந்த அன்புக்கீடாக, வேறு எவரையும் சொல்ல முடியாது.

**பூதேவி :** ஸ்ரீதேவியையும் என்னையும் சேர்த்துத்தான் சொல்கிறீர்களா சுவாமி?

**பகவான் :** நீங்கள் இப்படிப் பாமாலை புனைந்து நான் கே' ı தே இல்லை.

குற்றம் என்னுடையது இல்லை!

**ஸ்ரீதேவி :** உங்களுக்கு இப்படியொரு ஆசை இருப்பதை, முன்பே சொல்லியிருக்கலாமே!

**பகவான் :** நடக்கிற காரியமாக இருந்தால், சொல்லிப் பார்க்கலாம்.

**பூதேவி :** ஏன் நடக்காது? மானிடர்களின் துதிப்பாடல் களில், உங்களுக்கு மயக்கம் இருக்கிறது.

நான், அந்த மானிட சாதியிலே சங்கமம் ஆகிறேன்.

அந்தப் பெரியாழ்வார் கண்டெடுக்க, அவர் நந்தவனத்திலே, குழந்தையாகக் கிடக்கிறேன்.

அவர் ஊட்டுகின்ற தமிழால் வளர்ந்து, தமிழ்ப் பாசுரங்களால், உங்களைச் சந்திக்கிறேன்.

**ஸ்ரீதேவி :** பூதேவிக்கு என்னுடைய வாழ்த்துக்கள்!

**பகவான் :** தன்னால் முடிகின்ற காரியத்தில் ஈடுபட்டால், எல்லார்க்கும் நல்லது!

**ஸ்ரீதேவி :** பூதேவி எடுத்த காரியத்தை இனிதாக முடிப்பாள்!

அறிதுயில் கொள்வதையே பெரிதாக நினைப் பவர்களுக்கு, எதுவுமே முடியாத காரியந்தான்!

*பூதேவி :* இனிமேல் இங்கு நான் பேசிக் கொண்டு நிற்க மாட்டேன்.

அங்கு போய் வளர்ந்து, உள்ளம் கனிந்து, என் பாசுரங்களைப் பேச வைப்பேன்!

'என்னை ஆண்டுவிட்டாய் நீ!' - என்று பகவான் அப்பொழுது மனமாரக் கூறப் போகிறார்!

*ஸ்ரீதேவி :* அந்த நாளுக்காக ஆவலோடு காத்திருக்கிறேன்!

## காட்சி – 62

*வில்லிபுத்தூர். நந்தவனம்*

(இருள் விலகுமுன்பு, பெரியாழ்வார், நந்தவனத்திலே பூக்கொய்து கொண்டிருக்கிறார்.)

*பெரியாழ்வார் :* கண்ணா! ஆனிரையை மேய்க்க, நீ கானகமெல்லாம் திரிந்து, உன் கரிய திருமேனி வாடும்படிச் செய்யலாமா?

நீ, பானையிலுள்ள பாலைப் பருகிவிட்டாய் என்று, உன் பெருமையை அறியாதார், சிரிக்கின்றார்களே!

இந்த லீலையை நிகழ்த்தும் என் இனிய பிரானே!

நீ சூடி மகிழ, இதோ இந்தச் செண்பகப் பூ!

(இசையோடு பாடுகிறார்.)

"ஆனிரை மேய்க்க நீ போதி
அருமருந்து ஆவது அறியாய்
கானகம் எல்லாம் திரிந்து உன்
கரிய திருமேனி வாட
பானையிற் பாலைப் பருகிப்
பற்றாதார் எல்லாம் சிரிப்ப
தேனில் இனிய பிரானே!
செண்பகப் பூச் சூட்ட வாராய்"

(பெரியாழ்வார் இப்பொழுது புதரென மண்டிக் கிடக்கும், ஒரு துளசிச் செடியின் அடியில், ஒளி வெள்ளத்தைக் காண்கிறார்.)

*பெரியாழ்வார் :* அந்தத் துளசிச் செடியின் அடியில், ஒளி வெள்ளம் தெரிகிறதே!

நிலவு பூமிக்கு இறங்கி வந்து விட்டதா?

பகவானின் நீண்முடியின் ஒளிக் கதிர்கள் இங்கு எப்படி வந்தன?

(ஓடிப் போய்ப் பார்க்கிறார்.)

*பெரியாழ்வார் :* குழந்தை!

(துளசிச் செடியின் அடியில் கிடக்கும் குழந்தையை ஆவலோடு எடுக்கிறார்.)

*பெரியாழ்வார் :* பெண் குழந்தை!

இந்த நந்தவனத்தில், செந்தாமரையாகப் பூத்திருக்கிறது!

இது யாருடைய குழந்தையோ? இதை நான் இல்லத்திற்கு எடுத்துச் செல்வது முறையோ?

இதனுடைய முகமே, ஒரு நூறு பாசுரங்களைப் பேசத் துடிப்பது போலத் தெரிகிறதே!

என்ன மாயம் இது!

(இப்பொழுது வானில் இருந்து, துந்துபியின் ஒலி கேட்கிறது.)

*அசரீரிக்குரல் :* எமக்குப் பல்லாண்டு பாடிய பெரியாழ்வாரே!

அந்தப் பரிவுக்காக, கருணைக்காக, உம் பிள்ளையில்லா வருத்தம் தீர, இந்த இளம் தளிரை உமக்கு அளித்திருக்கிறோம்!

இதை எடுத்து ஆதரித்து வாரும்!

கோதை என்ற நாமம் சூட்டி, இல்லத்திலே இனிமையைத் தவழ்ந்திடச் செய்யும்!

**(இப்பொழுது குயில்கள் கூவுகின்ற இசை கேட்கின்றது.**

**கிளிகள், 'கோதை!', 'கோதை!' என்ற மொழி பேசியபடி, அங்கு வந்து அமர்கின்றன.**

**வானிலிருந்து மழைத் துளிகள் சிதறுகின்றன.)**

***பெரியாழ்வார் :*** *கூவும் குயில்களும், 'கோதை' என்று மொழி பேசும் கிளிகளும், அர்ச்சதையாக விழும் மழைத்துளிகளும், இது அவதாரக் குழந்தையோ என்று எண்ண வைக்கிறது.*

*என் கண்ணனின் அவதார தினந்தான், இப்பொழுது என் நினைவுக்கு வருகிறது.*

*கோகுலத்திலே கண்ணன் வரவு கண்டு, அங்குள்ளோர் மகிழ்ச்சி தாங்க மாட்டாது, அங்கும் இங்கும் ஓடுவார்கள்; சுண்ணக் கலவையிலே விழுவார்கள்; ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் களி கொள்வார்கள்; நம்பிரான் எங்கு எங்கு என்று நாடிப் போவார்கள்!*

*பாடுவார்! பல் பறை கொட்டி ஆடுவார்!*

*அன்று ஆய்ப் பாடியில் நான் இல்லை!*

*அந்த இன்பத்தை, இன்று நான் அனுபவிக்க, பகவான், என் கையில், இந்த இரத்தினத்தைக் கொடுத்திருக்கிறான்!*

*இந்தக் குழந்தையைக் கண்டு மனையாள் மகிழ்வாள்.*

*அவள் மடி கனக்கச் செல்வமொன்று கிடைத்து விட்டது.*

(பூக் குடலையோடும் குழந்தையோடும் அங்கிருந்து நடக்கிறார்.

இசையோடு பாடியபடி நடக்கிறார்.)

"ஓடுவார், விழுவார், உகந்து ஆலிப்பார்,
நாடுவார், நம்பிரான் எங்குத்தான் என்பார்;
பாடுவார்களும் பல் பறை கொட்ட நின்று
ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே"

# காட்சி – 63

*பெரியாழ்வாரின் இல்லம்*

(பத்மா, குழந்தையைக் கைகளில் ஏந்தி, அதன் உச்சி முகர்ந்து மகிழ்ந்து கொண்டிருக்கிறாள்.)

*பெரியாழ்வார் :* குழந்தை இல்லையே என்று குறைப் பட்டாயே!

அந்தக் குரல், பகவான் சந்நிதிக்கு எட்டி விட்டது.

உன் வயிற்றிலிருந்து வராமல், பூமித்தாயே, தன் வயிற்றிலிருந்து, இந்தக் குழந்தையைப் பெற்றுக் கொடுத்து வி' ı ாள். அன்று ஜனகர் கண்டெடுத்ததைப் போல, இன்று அடியேனும் கண்டெடுத்த தெய்வாம்சக் குழந்தை இது.

திரு ஆடிப் பூரத்தில், இந்த ஜெகத்தில் உதித்த வைரம் இது.

பத்மா! அந்த அசோதைக்குக் கிடைத்த பேறு, உனக்கும் கிடைத்து வி' ı து.

நம் வீட்டிலும், இந்தக் கண்ணன் தவழப் போகிறான்.

கோகுலத்தில் கண்ணன் வளர்ந்த கண்கவர் வனப்பை, நான் இங்கு கண்ணாரக் காணப் போகிறேன்.

அவன் தளர் நடையையும், மலர் முகத்தையும், நாவாரப் பாடப் போகிறேன்.

இதை எண்ணித்தான், பிள்ளைத் தமிழ் வேண்டு மென்று, என் பெருமான் முன்பே பேசிவி' ı ான்.

கண்ணா! கொஞ்சிட நீ இருக்கும் பொழுது, கொஞ்சு தமிழுக்குப் பஞ்சமா என்ன?

நீ வளர்ந்த வசீகரத்தை வார்த்தைகளால் வரைந்து விடுகிறேன்.

## காட்சி – 64

*பெரியாழ்வாரின் இல்லம்*

(படுத்திருக்கும் குழந்தை கோதை, தன் காலைத் தூக்கிக் கால் பெருவிரலைச் சுவைத்துப் பார்க்கிறது.

இந்தக் காட்சியைக் கண்டு பரவசம் கொள்கிறார் பெரியாழ்வார்.)

***பெரியாழ்வார் :*** *பத்மா! பார்!*

*என் கண்ணன் பாதக் கமலங்களைச் சுவைத்து உண்ணும் சோபிதத்தை; இந்தக் கோதை, என் கண்ணெதிரே காட்டி விட்டாள்.*

*அந்தத் தேவகி, யசோதைக்குத் தந்த தெவிட்டாத அமுதை, இந்தத் தேனின் பெருக்கு, நாம் காணச் செய்து விட்டது.*

(இசையோடு பாடுகிறார்)

"சீதக் கடலுள் அமுது அன்ன தேவகி
கோதைக் குழலாள்அசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்து உண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே,
பவள வாயீர் வந்து காணீரே!"

## காட்சி – 65

*பெரியாழ்வாரின் இல்லம்*

(கோதையைத் தொட்டிலில் இட்டு ஆட்டுகிறாள் பத்மா.

'தாலேலோ' என்று பாடுகிறாள்.)

***பெரியாழ்வார் :*** *கண்ணா! மாணிக்கமும் வயிரமும் கட்டிய, ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறு தொட்டிலை, உனக்குப் பிரமன் விரும்பித் தந்தான்.*

*உறங்கும் நீயோ, ஒன்றுமறியாதவன் போல் குறள் வடிவெடுத்து, பின்னர் வையம் அளந்த வளர் புகழான்.*

*உனக்குத் தாலாட்டுப் பாட, என் தமிழ் தவிக்கிறது.*

(பாடுகிறார்.)

"மாணிக்கம் கட்டி வயிரம் இடை கட்டி
ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறுத் தொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்
மாணிக் குறளனே! தாலேலோ!
வையம் அளந்தானே!தாலேலோ!"

## காட்சி – 66

*பெரியாழ்வாரின் இல்லம்*

(ஒரு வயதுப் பிராயமாக வளர்ந்து விட்ட கோதையை, இடுப்பில் வைத்தபடி, நிலவைக் காட்டிச் சோறு ஊட்டிக் கொண்டிருக்கிறாள் பத்மா.)

*பத்மா :* *கோதை! நிலவைக் கை நீட்டி அழைக்கிறாயா கண்ணு!*

*நிலா! நிலா! என் கோதையோடு விளையாட வா!*

*மேகத்தில் போய் மறைந்து கொள்ளாதே!*

*என் கோதை பண்ணுகிற கூத்துக்களைப் பார்க்கவேண்டுமென்றால், நீ இங்கே ஓடிவா!*

*கோதையின் அப்பாவும், இப்பொழுது பாடப் போகிறார் - ஓடிவந்து கேளு!*

*ஒரு குடம் தேன் இங்கு சிதறப் போகிறது!*

(பெரியாழ்வார் இசையோடு பாடுகிறார்.)

"என் சிறுக்குட்டன் எனக்குஓர் இன்னமுது
எம்பிரான்
தன் சிறுக் கைகளால் காட்டிக் காட்டி
அழைக்கின்றான்
அஞ்சன வண்ணனோடு ஆடல் ஆட
உறுதியேல்
மஞ்சில் மறையாதே, மாமதி! மகிழ்ந்து
ஓடி வா"

## காட்சி – 67

*பெரியாழ்வாரின் இல்லம்*

(குழந்தையான கோதை, கீழே அமர்ந்திருந்து, கைகளால் சப்பாணி கொட்டிச் சிரிக்கிறது.

இதைக் கண்டு பெரியாழ்வாரும் பத்மாவும் மகிழ்கின்றனர்.)

*பத்மா :* *சப்பாணி கொட்டி மகிழும், என் கோதையின் கைகள், மலர்க்கைகள்!*

*பெரியாழ்வார் :* *என் கோகுலத்துக் கண்ணனின் கைகளும் மலர்க் கைகள்தான்!*

*அந்த மலர்க் கைகள், உரம் பெற்ற திறமும் உண்டு!*

*இரணியன் நட்ட தூணை தட்டிய பொழுது, அதிலிருந்து சிங்க உருவாய் வெளிவந்து, இரணியன் மார்பைப் பிளந்திட்ட அந்தக் கைகள் தான், மலரும் மலரும் மோதுவது போல், சப்பாணியும் கொட்டி மகிழ்ந்திருக்கிறது!*

(இசையோடு பாடுகிறார்)

"அளந்த இட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே
வளர்ந்திட்டு வாள் உகிர்ச் சிங்க உருவாய்
உளந்தொட்டு, இரணியன் ஒண்மார்வு அகலம்
பிளந்திட்ட கைகளால் சப்பாணி
பேய் முலை உண்டானே சப்பாணி"

## காட்சி – 68

*பெரியாழ்வாரின் இல்லம்*

(குழந்தையான கோதை தளர் நடையிட்டு வருகிறது.

இது கண்டு பெற்றோர் பூரிக்கின்றனர்)

*பெரியாழ்வார் :* என் கண்ணன் இப்படித் தளர்நடை நடக்கும் பொழுது, அவன் அடி வைத்த இடங்களில், அவன் ஒரு பாதத்திலிருந்து சங்கும், இன்னொரு பாதத்திலிருந்து சக்கரமும், இலச்சினைகளாகப் பதியுமாம்!

அந்த இன்ப வெள்ளத்தைப் பெய்து பெய்து, அவன் நடக்கின்ற பேரழகை, என்னால் பேச முடியுமா?

(இசையோடு பாடுகிறார்.)

"ஒரு காலிற் சங்கு ஒரு காலிற் சக்கரம்
உள்ளடி பொறித்து அமைந்த
இரு காலுங்கொண்டு அங்கு அங்கு எழுதினாற்போல்
இலச்சினை பட நடந்து
பெருகாநின்ற இன்ப வெள்ளத்தின் மேல்
பின்னையும் பெய்து பெய்து
தருகார்க் கடல் வண்ணன் காமர் தாதை
தளர்நடை நடவானோ!''

## காட்சி – 69

*பெரியாழ்வாரின் இல்லம்*

(குழந்தையான கோதை ஓடி வந்து பெரியாழ்வாரின் முதுகைக் கட்டி அணைக்கிறது.)

*பெரியாழ்வார் :* என் கண்ணன், நீல வண்ணன், ஓடி வந்து, என்னைப் புறம் புல்கிய அருமையை இப்பொழுது அனுபவிக்கிறேன்!

அவன் பால்ய லீலைகளை நினைத்தால், என் மனது, அலை கடல் போலக் கூத்தாடுகிறது.

உரலைக் கவிழ்த்து, அதன் மேல் ஏறி, தித்தித்த பாலையும் வெண்ணெயையும், திரு வயிறு ஆர விழுங்கிய, அந்தத் திருவிளையாடல், நெஞ்சிருக்கும் வரைத் தித்திக்கும், இன்ப நினைவு ஆயிற்றே அது!

(இசையோடு பாடுகிறார்.)

“பொத்த உரலைக் கவிழ்த்து, அதன் மேல் ஏறி
தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்
மெத்தத் திரு வயிறு ஆர விழுங்கிய
அத்தன் வந்து என்னைப் புறம் புல்குவான்
ஆழியான் என்னைப் புறம் புல்குவான்”

## காட்சி – 70

*பெரியாழ்வாரின் இல்லம்*

(மூன்று வயதுக் குழந்தையான கோதையை நீராட அழைக்கிறாள் தாய்.)

**பத்மா :** *கோதை! நீராட வா! சுடுநீரைப் பதமாக வைத்திருக்கிறேன்.*

*உன் மேனி தொடு நீர், உகப்பால் குளிர்ந்து விடும்.*

(கோதையைக் குளிப்பாட்டுகிறாள் பத்மா.)

**பெரியாழ்வார் :** *என் கண்ணன் மஞ்சனம் ஆடிய வண்ணத்தை, என் இல்லத்திலே காண்கிறேன்.*

*எண்ணெய்க் குடத்தை உருட்டி, இளம் பிள்ளைகளைக் கிள்ளி எழுப்பி, ஒன்றும் அறியாதவன் போலக் கண்ணைப் புரட்டி விழிக்கும் என் கற்கண்டுப் பிரானை, யசோதைத் தாய், கனிகள் தருவதாகச் சொல்லி, நீராட அழைத்திருக்கிறாள்.*

(இசையோடு பாடுகிறார்.)

"எண்ணெய்க் குடத்தை உருட்டி
        இளம் பிள்ளை கிள்ளி எழுப்பிக்
கண்ணைப் புரட்டி விழித்துக்
        கழகண்டு செய்யும் பிரானே
உண்ணக் கனிகள் தருவன்
        ஒலிகடல் ஓதநீர் போலே
வண்ணம் அழகிய நம்பி
        மஞ்சனம் ஆட நீ வாராய்"

## காட்சி – 71

*பெரியாழ்வாரின் இல்லம்*

(குழந்தையான கோதைக்குத் தாய், காக்கையிடம் பேசுவது போல் நடித்துக் குழல் வாரி விடுகிறாள்.)

*பத்மா :* *காக்கையே! காக்கையே! என் கோதைக்குக் குழல்வாரி விட நீ வருவாயா?*

***பெரியாழ்வார் :*** *இது யசோதையின் பேச்சம்மா! அவள்தான், கண்ணனுக்குக் குழல் வார, காக்கையைக் கூவி அழைத்தாள்.*

*குழல் வார வந்தால், கூந்தலைக் கொடுப்பான்! கள்ள எண்ணத்தோடு வந்தால்,*

*கிள்ளிக் களைவான்!*

*பறவை உருக் கொண்டு, ஓர் அசுரன் பாதகம் செய்ய வந்த போது, அவன் வாயைக் கிழித்துப் போட்ட வரலாறும், அந்தக் குழந்தைக்கு உண்டு!*

(இசையோடு பாடுகிறார்.)

"பள்ளத்தில் மேயும் பறவை உருக்கொண்டு
கள்ள அசுரன் வருவானைத் தான் கண்டு
புள் இது என்று பொதுக்கோ வாய் கீண்டிட்ட
பிள்ளையை வந்து குழல் வாராய், அக்கக்காய்!
        பேய்முலை உண்டான் குழல் வாராய் அக்கக்காய்!"

## காட்சி – 72

*பெரியாழ்வாரின் இல்லம்*

(சிறுமியாக இப்பொழுது கோதை வளர்ந்திருக்கிறாள்.)

***பத்மா :*** *கோதை! மணம் கமழ்கின்ற மல்லிகைப் பூ சூட்டி விடுகிறேன், வா.*

(கோதையின் கூந்தலில், மல்லிகைப் பூவைச் சூட்டி விடுகின்றாள்.)

***பெரியாழ்வார் :*** *என் மன்னனும் மல்லிகைப் பூச்சூடி, கோகுலத்தில் வலம் வந்திருக்கிறான்.*

*கருஉடை மேகங்கள், அவனது கோலம்! உலகு ஏழும் உண்டாக வந்து பிறந்தது, அவனது காலம்!*

*திரு உடையாள் மணவாளனாக, திருவரங்கத்தே கிடந்தது, அவனது காருண்யம்!*

(இசையோடு பாடுகிறார்.)

"கரு உடை மேகங்கள் கண்டால்
உன்னைக் கண்டால் ஒக்கும்; கண்கள்
உரு உடையாய் உலகு ஏழும்
உண்டாக வந்து பிறந்தாய்
திரு உடையாள் மணவாளா
திருவரங்கத்தே கிடந்தாய்
மருவி மணம் கமழ்கின்ற
மல்லிகைப் பூச் சூட்ட வாராய்!"

## காட்சி – 73

*பெரியாழ்வாரின் இல்லம்*

(சிறுமி கோதை, பாற் செம்பை எடுத்துப் பருக, அவள்மேலெல்லாம் பால் கொட்ட, திருதிருவென்று விழித்துக் கொண்டு நிற்கிறாள்.

இதைப் பார்த்துப் பெற்றோர் சிரிக்கின்றனர்.)

*பெரியாழ்வார் :* இந்தக் கோதையின் பிள்ளை விளையாட்டு, கோகுலத்தில் என் கண்ணன் புரிந்த லீலையை, என் கண்ணுக்குக் காட்டுகிறது.

ஓர் ஆயர்குல மங்கை, பாலைக் கறந்து, அடுப்பிலே வைத்து விட்டு, தன் மகளைக் காவலுக்கும் இருத்தி விட்டு, நெருப்பு வேண்டிப் பக்கத்து வீட்டிற்குச் சென்று, சிறிது பொழுது பேசிக் கொண்டிருந்தாளாம்.

அதற்குள், சாளக்கிராமம் உடைய என் நம்பி, அந்தப் பாற் செம்பை எடுத்துச் சாய்த்துப் பருகிவிட்டு, ஒன்றும் அறியாதவன் போல் நின்று கொண்டிருந்தானாம்.

யசோதையே! உன் மகனைக் கூப்பிட்டுக் கேள் - என்று அவள் முறையிடுகிறாள்.

என் மனம் அவன் விளையாட்டை எண்ணிக் கரைகின்றது.

(இசையோடு பாடுகிறார்.)

"பாலைக் கறந்து அடுப்பு ஏற வைத்துப்
பல்வளையாள் என் மகள் இருப்ப
மேலை அகத்தே நெருப்பு வேண்டிச்
சென்று இறைப்பொழுது அங்கே பேசிநின்றேன்
சாளக்கிராமம் உடைய நம்பி
சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்
ஆலைக் கரும்பின் மொழி அனைய
அசோதை நங்காய்! உன் மகனைக் கூவாய்"

## காட்சி – 74

*பெரியாழ்வாரின் இல்லம்*

**(தந்தையோடு அமர்ந்து பூக்கட்டிக் கொண்டிருக்கிறாள், மங்கைப் பருவம் எய்திவிட்ட கோதை.)**

*பெரியாழ்வார் :* பூமாலை ஒன்று பூமாலை தொடுப்பது போல், நீ பூத்தொடுக்கும் அழகு தெரிகிறதம்மா!

*பத்மா :* கழுத்திலே பூமாலை சூட வேண்டிய பருவத்திற்கு வந்து வி'  ள் ாள்.

உங்கள் நந்தவனத்துப் பூ, கோயிலுக்குச் செல்வது போல, இந்த நந்தவனத்துப் பூங்கொடியும், இன்னொரு இல்லத்திற்குச் செல்வதுதானே முறை!

விரைவில், நம் மகளுக்கு, மணத்தை உறுதி செய்யுங்கள்.

*கோதை :* என் கல்யாணத்திற்கு இப்பொழுது என்னப்பா அவசரம்?

தங்களி  ்ப் பாகவதம் இன்னும் முழுமையாகக் கேட்கவில்லையே!

*பெரியாழ்வார் :* உலை கொதித்தவுடன், இறக்கி வைக்கிற மாதிரி, உன் அம்மா, நீ பெரியவள் ஆனதும், இன்னொருவன் கையில் பிடித்துக் கொடுக்கத் துடிக்கிறாள்!

கோதை! நீ கற்ற சாஸ்திரங்கள், உனக்கு நல்ல வழி காட்டும்.

உனது திருமணத்தைச் சிறிது காலம் கடந்து வைத்துக் கொள்ளலாம்.

இப்பொழுது திருப்திதானே?

*பத்மா :* கோதை மனதிற்குள் யாரையாவது நினைத்துக் கொண்டிருக்கிறாளா? - என்று கேளுங்கள்!

*கோதை :* பகவானைத்தான் நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்!

**(இதைக் கேட்டுப் பெரியாழ்வார் சிரிக்கிறார்.)**

## காட்சி – 75

*வட பத்ர சாயி கோயில்*

**(சந்நிதியில், பெரியாழ்வார், பத்மா, கோதை ஆகியோர் நிற்கின்றனர்.)**

*பத்மா :* (அர்ச்சகரிடம்) சுவாமி! இன்று கோதை ஜன்மநட்சத்திரம் - ஆடிப் பூரம்!

அவள் பெயருக்கு ஒரு அர்ச்சனை பண்ணி விடுங்கள்.

**அர்ச்சகர் :** ஓ! ஆடிப் பூரம், கோதையின் ஜன்ம நட்சத்திரமா?

**கோதை :** என்னை நந்தவனத்திலே, அப்பா கண்டெடுத்த போது இருந்த நட்சத்திரம்!

**பெரியாழ்வார் :** ஏம்மா இப்படியெல்லாம் பேசுகிறாய்?

பகவான் சிறையிலே பிறக்கவில்லையா?

**அர்ச்சகர் :** இது கோவிந்தன் வாழும் ஊர் என்றுதான் சொல்லப்படுகிறது.

கோதை பிறந்த ஊர் என்றும் பின்னாளில் பேசப் போகிறார்கள்.

**பெரியாழ்வார் :** உங்கள் சொல்லை, பெருமாள் வாய்ச் சொல்லாக நினைக்கிறோம்.

(அர்ச்சகர் மந்திரம் சொல்லி, கோதை பெயருக்கு அர்ச்சனை செய்கிறார்.

தீப ஆராதனை காட்டப் பெறுகிறது. மூவரும் கை குவித்துச் சேவிக்கின்றனர்.)

**பத்மா :** கோதை! நல்ல கணவராக வர வேண்டுமென்று பெருமாளை வேண்டிக் கொள்.

(கோதை மௌனமாக இருக்கிறாள்.)

**பத்மா :** வேண்டுதலை வாயைத் திறந்து சொல்லேன்! பெருமாளிடம் பேசுவதற்கு வெட்கமா?

(இப்பொழுதும் கோதை மௌனமாக இருக்கிறாள்.)

**பத்மா :** உனக்குப் பதிலாக, நான் வேண்டிக்கொள்கிறேன். நாளைக்குக் கல்யாணம் ஆகிப் பிள்ளை பெற வேண்டியவள் நீதான்!

**பெரியாழ்வார் :** சந்நிதிக்கு வந்தால், பெருமாளைப் பற்றிப் பேச வேண்டும்.

மற்றவற்றைப் பேச, இந்தப் பூமியிலே எவ்வளவோ இடம் இருக்கிறது!

*பத்மா :* பெருமாளிடம் பேச வேண்டியதைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறோம்.

வட பத்ர சாயி! கோதைக்கு நல்ல வரனாக அமைய வேண்டும்.

இதற்கு உன்னைத்தான் நம்பியிருக்கிறோம்.

நான் சுமக்காமல் பெற்றெடுத்த செல்வம் அவள்!

அவளை, ஒருவன் கையிலே பிடித்துக் கொடுக்க வேண்டியது, உன் பொறுப்பு!

(பெருமாள் இதற்கு மறுமொழியாகச் சிரித்தபடி, 'இல்லை' என்று தலை ஆட்டுவது போல, கோதைக்கு மாத்திரம் தெரிகிறது.)

## காட்சி – 76

*நந்தவனம்*

(தோழி கீதாவோடு, கோதை, நந்தவனத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கிறாள்.)

*கீதா :* (அதிர்ச்சியோடு) கோதை! என்ன உளறுகிறாய்!

*கோதை :* பெருமாள் என்னை விரும்புகிறார்! நான் அவரை விரும்புகிறேன்! - என்று சொல்கிறேன்!

எனக்கு ஒரு மானிடனோடு கல்யாணம் என்றவுடன், அவர் ஏளனமாகச் சிரித்தாரடி!

*கீதா :* உன் மனப் பிரமை அது!

பகவான் எல்லோருக்கும் பொதுவானவர் அவரைக் கையெடுத்துக் கும்பிட வேண்டும். கட்டி அணைக்க நினைத்து, மனசை விரசப்படுத்தக் கூடாது!

**கோதை :** அவரை விரும்புவது ஒன்றும் தவறாக எனக்குத் தெரியவில்லை.

இவ்வளவு நாள் வெளியிலே சொல்லாமல், மனதிற்குள் வேலியிட்டு வைத்திருந்தேன்.

இன்று சந்நிதியிலே, தன் சம்மதத்தையும் அவர் ஜாடையாகத் தெரிவித்து விட்டார்!

**கீதா :** உனக்கென்ன பைத்தியமா? இதை வெளியிற் சொன்னால், உன்னை அடைத்து வைத்து வைத்தியம் பார்ப்பார்கள்!

**கோதை :** எல்லோரையும் போல் நான் இல்லை என்றவுடன், எனக்கு ஏதோ என்று அஞ்சுகிறாய்!

பயப்படாதே! என் கார் மேக வண்ணனை நான் கைப்பிடிப்பேன்!

இன்று அவன் சந்நிதிக்குப் போய், என் எண்ணத்தைத் தெரிவிக்கிறேன்.

என்ன பதில் என்பதை வந்து சொல்கிறேன்.

(கோதை அங்கிருந்து செல்கிறாள்.)

**கீதா :** கோதை! நந்தவனத்திலே பிறந்த நீ, கோயிலிலே பள்ளியறை காண நினைக்கிறாய்!

உன் சித்தத்தை, அந்தப் பெருமாள்தான் தெளிய வைக்க வேண்டும்!

## காட்சி – 77

*வடபத்ர சாயி சந்நிதி*

(சந்நிதியில் பத்மாவும் கோதையும் நிற்கின்றனர்.)

**பத்மா :** இப்படி அவசரமாகக் கோயிலுக்கு வர வேண்டிய காரணம் என்ன?

**கோதை :** என் கல்யாணம் பற்றி, இன்று பெருமாளிடம் பேசி விடுவது என்று வந்திருக்கிறேன்.

*பத்மா :* பேசுவதா? அவரைக் கும்பிட்டுக் கூத்தாடி வேண்டிக்கொள்.

*கோதை :* அவசியம் ஏற்பட்டால், அதையும் செய்து விடுகிறேன்.

*பத்மா :* பெருமாளை, உன் தோழிப் பெண் என்று நினைத்து விட்டாயா?

கண்ணிலே நீரைக் காட்டி, அவன் காலடியிலே வைக்கிற வேண்டுதல்தான், தடையெலாம் தாண்டி நிறைவேறும்!

*கோதை :* இந்தக் கோதைக்காகக் கண் கலங்க, வேறு இரண்டு ஜீவன்கள் இருக்கும்பொழுது, நானும் எதற்காகக் கண் கலங்க வேண்டும்?

*பத்மா :* இப்படி எதையாவது பேசி, என் நெஞ்சை நெகிழச் செய்து விடுகிறாய்!

சரி, வேண்டுதலைச் சொல்லு - சத்தமாகச் சொல்லு.

எப்படிப் பேசினாலும், பெருமாளுக்குக் கேட்கும்.

எனக்குக் கேட்க வேண்டாமா?

*கோதை :* என் கல்யாணம் பற்றி, முரசு அதிர்வது போல் பேச, எனக்கு நாணமாக இருக்காதா?

*பத்மா :* தாய் அறியாத சூலா?

*கோதை :* உன்னைச் சொல்ல வில்லை அம்மா!

என்ன இருந்தாலும், அவர் ஓர் ஆண் மகன் ஆயிற்றே!

*பத்மா :* பெருமாளிடம் பேச நாணமா?

*கோதை :* உன்னைப் போல் வயது கடந்து விட்டால், பரவாயில்லை!

என் நிலைமை அது இல்லையே!

*பத்மா :* உன் பேச்சைப் புரிந்து கொள்ளவே முடிய வில்லை! என்னை ஏன் இங்கு இழுந்து வந்தாய்?

***கோதை :*** தாயின் முன்னிலையில், தவிக்கும் என் மனதை, அவருக்கு உணர்த்தத்தான்!

*பத்மா :* சரி - எப்படியோ, பெருமாளை வேண்டிக்கொள். பெருமாளுக்காவது, நீ பேசுவது புரிந்தால் சரி.

***கோதையின் மனது :*** என் நெஞ்சை நெருப்பாக்கி, என்னைத் துன்பப்படுத்தும் கொடியவரே! இனியவரே! உம்மை நான் விரும்புகிறேன். என்னை மணம் செய்ய, உமக்குச் சம்மதம்தானே?

('சம்மதம்' என்பதற்கு அறிகுறியாகப் பெருமாள் தலை அசைப்பது, கோதையின் கண்களுக்குத் தெரிகிறது.

உவகைப் பெருக்கோடு, அம்மாவைக் கட்டி அணைத்துக் கொள்கிறாள்.)

*பத்மா :* என்ன இது! பெருமாள் ஏதாவது சொன்னது போல், உனக்குத் தோன்றியதா?

***கோதை :*** என் எண்ணம்போல் எல்லாம் நடக்கும் - அம்மா!

*பத்மா :* ஹப்பா! பிள்ளை வீட்டார், சீக்கிரம் வந்தால் நல்லது.

வா, வீட்டிற்குப் போகலாம்.

## காட்சி – 78

*நந்தவனம்*

(நந்தவனத்தில் ஓடுகிறாள் தோழி கீதா. அவளைப் பிடிக்கப் பின் தொடர்ந்து ஓடுகிறாள் கோதை.)

***கோதை :*** (ஓடியபடி...) கீதா! நில்லடி....

*கீதா :* (ஓடியபடி...) என்னை ஆளை விடு!

நீ பேசுகிற பேச்சு அசுரத்தனமாக இருக்கிறது!

(கோதை, கீதாவைப் பிடித்து விடுகிறாள்.)

*கோதை :* என்னைக் கண்டு ஏன் இப்படிப் பயப்படுகிறாய்?

*கீதா :* பித்துப் பிடித்து நீ பேசுகிற பேச்சுக்கெல்லாம், உடந்தையாய் இருந்தேன் என்று நாலு பேர் நாளைக்கு என்னைப் பழி தூற்றவா?

பெருமாள் உன்னை மணம் செய்யச் சம்மதித்து விட்டார் என்று கூறுகிறாயே!

சின்னஞ்சிறுசுகள் கூட, இதைக் கேட்டால், கைகொட்டிச் சிரிக்கும்!

உன் தோழி நான். உன்னைப் பார்த்துச் சிரிக்க முடியவில்லை. அதனால் அழுகிறேன்.

(மௌனமாக அழுகிறாள் கீதா.)

*கோதை :* கீதா! எனக்காக நீ அழும்போது, உன்னிடம் என் உள்ளத்தில் உள்ளதைச் சொல்ல வேண்டாமா?

நல்லதே நடக்கும். நம்பியிரு.

என்னை விலக்கி விட்டு, உன்னால் இருக்க முடியுமா?

எனக்குச் சித்தப் பிரமை என்று எப்படி உன்னால் சொல்ல முடிகிறது?

நீயே இப்படிச் சொன்னால், ஊரார் என்ன சொல்வார்கள்?

இதற்கு அஞ்சித்தான், மற்றவர் முன்னிலையில் ஊமையாக நிற்கிறேன்!

உன்னிடம் மாத்திரம் பேசினேன். நீ என்னைப் பிசாசு என்று கருதி ஓடுகிறாய்!

(கீதா இப்பொழுது ஆதரவோடு, கோதையைக் கட்டி அணைத்துக் கொள்கிறாள்.)

*கீதா :* என் செயலைப் பொறுத்துக் கொள் கோதை!

நீயும் நானும் மானிடப் பெண்கள். இதை மறந்து விடுகிறாயே என்பதுதான் என்னுடைய ஆதங்கம்.

கோதை! நீ எவ்வழி போனாலும், உடன் வருகிறேன்.

விளைவைப் பங்கிட்டுக் கொள்கிறேன். போதுமா?

*கோதை :* இதுதான் தோழிக்கு அழகு!

என் மணத்தின் போதும், நீதான் தோழியாக இருக்க வேண்டும்.

'நான் மானிடப் பெண்' என்று மறுத்து ஒதுங்கக் கூடாது.

*கீதா :* இதைத் தவிர, வேறு ஏதாவது பேசலாமே!

*கோதை :* இதைத் தவிர, பேசுவதற்கு வேறு என்ன இருக்கிறது?

அன்னங்கள் பரவி விளையாடும் இந்த வில்லிபுத்தூரில், என் அன்பர் இருக்கின்றார். அறிவாய் நீ.

அவர் பொன்னடியைக் காண வேண்டுமென்ற ஆசையால், என் கயற்கண்கள் தூங்கவில்லை கீதா!

இதோ, தலை காட்டும் குயில், அந்த உலகளந்தானை இங்கே வரச் சொல்லிக் கூவினால், நான் இங்கு பாலமுது ஊட்டி வளர்க்கும் என் கோலக் கிளியை, அந்தக் குயிலோடு தோழமை கொள்ளச் செய்வேன்!

**(கிளி ஒன்று தத்தித் தத்தி வந்து, கோதையின் மடியில் அமர்கிறது.)**

*கோதை :* என் பேச்சுப் பற்றி, என்ன நினைக்கிறாய்?

*கீதா :* நான் நினைத்ததைச் சொல்வது, தோழமைக்கு அழகாக இருக்காது.

*கோதை :* (சிரித்தபடி) நீ என் உ ( ன் இரு. அது போதும். என் எண்ணங்களை வண்ணத்தோடு, வேறு யாரிடம் பேசி அனுபவிக்க முடியும்?

(கோதை இசையோடு பாடுகிறாள்.)

"மென்னடை அன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத்தூர் உறைவான் தன்
பொன்னடி காண்பது ஓர் ஆசையினால் என்
பொரு கயற் கண்ணினை துஞ்சா
இன் அடிசிலோடு பால் அமுது ஊட்டி
எடுத்த என் கோலக் கிளியை
உன்னோடு தோழமைக் கொள்ளுவன் குயிலே
உலகு அளந்தான் வரக் கூவாய்"

(இதுவரை கலவரத்தோடு இருந்த கீதா, கோதையின் இந்தப்பாட்டுக் கேட்டு, முகம் மலர்கிறாள்.)

## காட்சி – 79

*திருப்பாற்கடல்*

*ஸ்ரீதேவி :* ஆஹா! அருமை! அருமை!
கோதை கவிதையில் பேசிவிட்டாள்.
கற்கண்டுத் தமிழை வீசிவிட்டாள்.
என்ன சொல்கிறீர்கள் இப்போது?

*பகவான் :* ஆழ்வார்களோடு அவளும் சேர்ந்து விடுவாள்.
நினைத்ததை முடித்துக் காட்டுவதில், ஸ்ரீதேவிக்கு இணையானவள் பூதேவி!

*ஸ்ரீதேவி :* சாமர்த்தியமாக வார்த்தைகளைப் பெய்திருக்கிறீர்கள்!

தான் பூதேவியின் அவதாரம் என்று அந்தக் கோதைக்குத் தெரியுமா?

*பகவான் :* தெரியாது - ராம அவதாரத்திலும், எனக்கு அந்த நினைவு வரவே இல்லை!

*ஸ்ரீதேவி :* உங்களையே மணப்பேன் என்று உறுதி கொண்டிருக்கும் அந்தக் கோதையை, எப்படி மணஞ் செய்யப் போகிறீர்கள்?

*பகவான் :* காலநேரம் கூடி வந்தால், நல்ல காரியங்கள் தானே நடக்கும்!

*ஸ்ரீதேவி :* எல்லாரும் பேசுவது போல, நீங்களும் பேசுவதா?

*பகவான் :* எல்லாரிலும் இருப்பவன் நான்தானே!

## காட்சி – 80

*பெரியாழ்வாரின் இல்லம்*

(பெரியாழ்வார் கோதைக்கு, ஸ்ரீமத் பாகவத்தைக் கூறிக் கொண்டிருக்கிறார். முக மலர்ச்சியோடு கோதை, அதைக் கேட்டுக் கொண்டிருக்கிறாள்.)

*பெரியாழ்வார் :* பகவான் கண்ணனைக் கோகுலத்துப் பெண்கள், தங்கள் கணவனாக அடைய வேண்டு மென்று விரதம் இருந்தார்கள்.

*கோதை :* ஓஹோ! இதற்காக விரதம் இருப்பது அவசியம் என்று, பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதா?

*பெரியாழ்வார் :* பனி பெய்யும் மார்கழி மாதத்தில், பகவான் எழுவதற்கு முன்பு எழுந்திருந்து, தோழிகள், ஒருவரையொருவர் எழுப்பிக் கொண்டு, கண்ணனின் பெருமையை உரக்கப் பாடிக் கொண்டு, யமுனையில் நீராடச் செல்வார்கள்.

(கோதை இதைக் கேட்டுச் சிந்தனை வயப்படுகிறாள்.)

# காட்சி – 81

*வில்லிபுத்தூர் வீதி*

*அதிகாலை நேரம்*

(அதிகாலை நேரத்திலே, வில்லிபுத்தூர் வீதியிலே, கோதை, கீதா முதலிய தன் தோழிகளோடு கண்ணனின் பெருமையைப் பாடியபடி வருகிறாள்.

கோதையைத் தொடர்ந்து, தோழிகளும் பாடுகின்றனர்.)

*கோதை :* மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ, நேரிழையீர்

*தோழிகள் :* மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ, நேரிழையீர்

*கோதை :* சீர் மல்கும் ஆய்ப் பாடிச் செல்வச் சிறுமீர்காள்
கூர் வேற் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்

*தோழிகள் :* சீர் மல்கும் ஆய்ப் பாடிச் செல்வச் சிறுமீர்காள்
கூர் வேற் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்

*கோதை :* ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார் மேனிச் செங்கண் கதிர் மதியம்போல் முகத்தான்

*தோழிகள் :* ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார் மேனிச் செங்கண் கதிர் மதியம்போல் முகத்தான்

*கோதை :* நாராயணனே நமக்கே பறை தருவான்
பாரோர் புகழப் படிந்து ஏலோர் எம்பாவாய்

*தோழிகள் :* நாராயணனே நமக்கே பறை தருவான்
பாரோர் புகழப் படிந்து ஏலோர் எம்பாவாய்

## காட்சி – 82

நந்தவனம்

**கோதை :** கீதா! இப்படி நான், உன் போன்ற தோழிக ளோடு, அதிகாலை வேளையிலே, வில்லிபுத்தூர் வீதிகளில், கண்ணன் பெருமையைப் பாடிச் சென்றதாகக் கனவு கண்டேன்.

அந்தக் கோபிகைகளுக்கு, நான் ஒன்றும் குறைந்தவள் அல்ல என்று காட்டுவது போல, நானும் மார்கழி நோன்பிருந்து, அந்த மாதவனைப் பாடுகிறேன்.

உங்களையும் கோகுலத்து மங்கையராக்கி, இந்த வில்லிபுத்தூரையும் ஆய்ப்பாடி ஆக்கி, அந்தக் கார்மேனிச் செங்கண்ணனை, கதிர்மதியம் போல் முகத்தானைக் கூவிக்கூவி அழைக்கிறேன்.

அவன் மேல் தாவத் துடிக்கும் என் தாபத்தை, கீதமாக்கி நாதமாக்கித் தருகிறேன்.

**கீதா :** நோய் முற்றிக் கொண்டு போகிறது என்று எண்ணுகிறேன்.

கோதை! உன் பாடல் அமிழ்தாக இருக்கிறது. ஆனால் பாடும் பொருள், ஆபத்தான பாதையில் நீ செல்வதைக் காட்டுகிறது. கண்ணனை மறக்கச் சொல்லவில்லை. கண்ணன் பகவான் என்பதை மறக்காமல் இருக்கச் சொல்கிறேன்.

**கோதை :** என் கண்ணன் பகவான் என்று எனக்கா தெரியாது?

அவன் ஓங்கி உலகு அளந்த உத்தமனடி!

தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரன்!

அவன் பேய் முலை நஞ்சுண்டவன்!

கள்ளச் சகடம் கலக்கு அழியக் கால் ஓச்சியவன்!

வெள்ளத்து அரவிற்துயில் அமர்ந்த வித்து அவன்!

மா வாய் பிளந்தவன்!

மல்லரை மா[illegible]டிய தேவாதி தேவன்!

அவன் மாமாயன்! மாதவன்! வைகுந்தன்!

இப்படி நாமம் பல உடைய என் நாயகன் அவன்!

**கீதா :** நீ பேசப் பேச எனக்கு அச்சமாக இருக்கிறது.

**கோதை :** அச்சம் தவிர்க்கத்தான், அவனைப் பேச வேண்டும். நெஞ்சார நினைக்க வேண்டும்.

சினத்தினால் தென் இலங்கைக் கோமானைச் செற்றவன், என் மனதுக்கு இனியானடி!

சங்கோடு சக்கரம் ஏந்தும் தடக்கையன், அந்தப் பங்கயக் கண்ணான், என் கைப்பிடித்து, என்னை மணக்கப் போகிறானடி!

**கீதா :** நான் போய் வருகிறேன் கோதை!

**கோதை :** அதற்குள் என்னடி அவசரம்?

**கீதா :** உன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தால், நான் பலராமனை மணாளனாக நினைக்க ஆரம்பித்து விடுவேன்! வருகிறேன்...

## காட்சி – 83

*பெரியாழ்வாரின் இல்லம்*

(பெரியாழ்வாரிடம் பாகவதம் கேட்கிறாள் கோதை.)

**பெரியாழ்வார் :** கண்ணனின் வேணுகானம் கேட்கிறது. அதைக் கேட்க, கோகுலத்து மங்கையர், தாங்கள் அணிந்திருக்கும் குண்டலங்கள் குலுங்க விரைந்தோடுகின்றனர்.

மாடு கறந்து கொண்டிருந்தவர், அதை அப்படியே விட்டுவிட்டும், பாலைக் காய்ச்சிக் கொண்டிருந்தவர், அதை இறக்கி வைக்காமலும் செல்கின்றனர்.

உண்டு கொண்டிருந்தவர், ஊணை வெறுத்தும், சந்தனம் பூசிக் கொண்டிருந்தவர், அதை மறந்தும், கண்ணுக்கு மைதீட்டிக் கொண்டிருந்தவர், அதைத் துறந்தும், உடுத்திக் கொண்டிருந்தவர், உடைகளையும் ஆபரணங்களையும் இடம் மாற்றித் தரித்துக் கொண்டும், உடைபட்ட வெள்ளம்போல் பாய்ந்து செல்கின்றனர்.

(பெரியாழ்வார் இப்படிப் பேசிக் கொண்டே போகிறார். கோதையின் எண்ணம், கண்ணனையும் பிருந்தாவனத்தையும் சுற்றிச் சுழல்கிறது.)

## காட்சி – 84

நந்தவனம்

(கோதை. கண்ணனை நினைந்து, காதல் வயப்பட்டுப் பாடுகிறாள்.)

"கற்றினம் மேய்க்கிலும் மேய்க்கப் பெற்றான்

காடுவாழ் சாதியும் ஆகப் பெற்றான்

பற்றி உரலிடை யாப்புமுண்டான்

பாவிகாள்! உங்களுக்கு ஏச்சுக்கொலோ?

கற்றன பேசி வசவு உணாதே

காலிகள் உய்ய மழை தடுத்துக்

கொற்றக் குடையாக ஏந்தி நின்ற

கோவர்த்தனத்து என்னை உய்த்திடுமின்"

## காட்சி – 85

பெரியாழ்வாரின் இல்லம்

**பெரியாழ்வார் :** கோதை! கோதை!

**கோதை :** (திடுக்கிட்டவளாகக் கற்பனை கலைந்தவளாக) அப்பா!

**பெரியாழ்வார் :** நீ பாகவதம் கேட்கிறாயா இல்லையா? உன் எண்ணம் எங்கோ போய்விட்டதாகத் தெரிகிறது.

**கோதை :** சொல்லுங்கள் அப்பா! கண்ணனின் வண்ண விளையாட்டு ஒவ்வொன்றையும், முழுதாக அனுபவிக்க, நெஞ்சொன்று போத வில்லை. நினைவு அதுவால் இயலவில்லை.

**பெரியாழ்வார் :** கண்ணன் கதை தித்திக்கும் மாமலை! தெவிட்டாத சுவைக் கடலம்மா!

இப்படிக் கண்ணனைத் தேடிப் பிருந்தாவனம் வந்த கோபிகைகள், அந்த மாதவனை, மஞ்சட் பட்டாடையுடனும், மாலையுடனும், புன்னகை பூத்த முகத்துடனும், மன்மதனுக்கும் மன்மதன் போன்ற அழகில், அவனைக் கண்டார்கள்!

அவன் உருவை உண்டார்கள்!

அவன் கை பிடித்துப் பார்த்தவள், தன் கைவளை இழந்தாள்!

அவன் மார்பிலே சாய்ந்தவள், மோகத்திலே மூழ்கினாள்!

மார்பைப் போர்த்தியிருந்தோர், அவன் மனதில் புகுந்ததால், மானத்தை நழுவ விட்டார்!

அவர்களோடு கை கோத்துக் கொண்டு, அவன் புரிந்த ராஜக்கிரீடை, அவர்களைக் கட்டி அணைத்துத் தொட்டு விளையாடிய அவன் விளையாட்டு, சுவைக்கச் சுவைக்கக் கரும்பாக இனிக்கும் கற்கண்டாகும்!

அந்தச் சரசத்திலே விரசம் இல்லை.

ஆத்மாக்கள் பரவசப்பட, தன்னைப் பின் தொடர்ந்து வர, பகவான், அந்தப் பாதையைக் கா' ı(ı னார்!

பிருந்தாவனத்துக் கண்ணனுக்கு அப்பொழுது வயது பத்துதான்!

***கோதையின் மனது :*** என் கண்ணனுக்கு வயது பதினெட்டு! பதினெட்டு!

## காட்சி – 86

*நந்தவனம்*

(கண்ணனை நினைந்து மெய்யுருகப் பாடுகிறாள் கோதை.)

"என்பு உருகி இனவேல் நெடுங்கண்கள்
இமை பொருந்தா பல நாளும்
துன்பக் கடல் புக்கு வைகுந்தன் என்பது ஓர்
தோணி பெறாது உழல்கின்றேன்;
அன்பு உடையாரைப் பிரிவு உறு நோயது
நீ"ıı' அறிதி குயிலே!
பொன் புரை மேனிக் கருளக் கொடிஉடைப்
புண்ணியனை வரக் கூவாய்"

## காட்சி – 87

*பெரியாழ்வாரின் இல்லம்*

(கோதை பாகவதம் கேட்டுக் கொண்டிருக்கிறாள்.)

***பெரியாழ்வார் :*** கருடன் அமிருதத்தை அடைந்தது போல, பகவான், தனது வலிமையால், சிசுபாலன் முதலியோரை வென்று, இளவரசி ருக்மிணியைக் கவர்ந்து சென்று, கல்யாணம் செய்து கொண்டார்.

அந்தச் சரித்தைச் சொல்லும் நா, சுகம் பெறும்.

கேட்கும் மனம், பக்தியால் கிளர்ந்து எழும்.

**கோதை :** அப்பா! அந்த ருக்மிணி, பகவானிடம் மனதைப் பறிகொடுத்து நின்றாளா?

**பெரியாழ்வார் :** பகவானுக்காகவே, தன் ஆவி அர்ப்பணிக்கப்பட்டது என்று, பகவானுக்கே ஒரு பிராமணரிடம் லிகிதம் கொடுத்து அனுப்பினாள்.

**கோதை :** இந்த யுகத்தில் அப்படி பிராமணர் இருக்கவா போகிறார்?

**பெரியாழ்வார் :** அந்த ருக்மிணி, கண்ணனையே கணவனாக வரித்து விட்டாள்.

சிங்கத்தின் இரையை, சிறு நரி தீண்டக் கூடாது என்று சிசுபாலன் சம்பந்தத்தை முறித்து வி' ı ாள்.

விவாகத்திற்கு முன், தான் கௌரி ஆலயத்திற்குச் சென்று திரும்பும்போது, கண்ணன் வந்து, தன்னைக் கவர்ந்து செல்லவேண்டுமென்று, வழியும் சொன்னாள் - எல்லார்க்கும் வழி கா' ıҁ ıı ıாக இருக்கும் அந்தக் கீதையின் நாயகனுக்கு!

**கோதை :** பெண்ணென்றால் அவள் பெண்! என்னைப் போன்றவள், ஏத்திப் போற்றுகின்ற குரு அவள்! அவள், ஸ்ரீதேவியின் அவதாரமல்லவா?

**பெரியாழ்வார் :** ஆமம்மா - அம்பிகையின் ஆலயத்திலிருந்து வெளிவந்த ருக்மிணியை, பகவான், தன் தேரிலே ஏற்றிக் கொண்டு, எதிரிகளை வென்று, தன் துவாரகைப் பட்டணத்திற்கு அழைத்துச் சென்று விடுகிறார்.

அங்கு முறைப்படி விவாஹம் நடைபெறுகிறது.

அப்பொழுது அங்குள்ள வீடுகள் எல்லாம், விழாக் கோலம் காண்கின்றன.

அங்கு ஏற்றப்பட்ட கொடிகள், எழிலைக் கொட்டுகின்றன.

கட்டப்பட்ட தோரணங்கள், மங்கலத்தைக் கட்டிக் காத்து நிற்கின்றன.

வைக்கப்பட்ட பூர்ண கும்பங்கள், அவன் பூரணமானவன் என்று சொல்லாமற் சொல்லிற்று.

அகில் தூபதீபங்கள், அவன் நாம ரூபம் போல், எங்கும் மணம் வீசி மயக்குகின்றன.

வாழையும் பாக்கும் வீதியெல்லாம் முளைத்தாற் போல் நின்று, அவன் வெற்றியைக் கொண்டாடு கின்றன; அவன் கல்யாண வைபோகத்தைக் கம்பீரமாகக் கூறி நிற்கின்றன.

துவாரகை இந்தத் திருக்கோலம் காட்டி இருக்க, மாமன்னன், மஹாலட்சுமியான ருக்மிணியை, வேத முறையோடு, மங்கல நாத இசையோடு, கல்யாணம் செய்து கொள்கிறார்.

(பெரியாழ்வாரின் இந்தப் பேச்சை, மனம் லயித்துக் கேட்கிறாள் கோதை.)

## காட்சி – 88

நந்தவனம்

*கோதை :* சீதா! அப்பா சொன்ன ருக்மிணி கல்யாண வைபோகத்தைக் கேட்டவுடன், என் கல்யாணம் பற்றி, என் கனவு விரிகிறது.

*சீதா :* கானல் நீரை நம்புவதுபோல், இப்படிக் கனவுகளில் வாழ்ந்து கொண்டிருப்பதா?

*கோதை :* என் கனவு நனவாகும்!

கண்ணன், என் மன்னன் ஆவான்!

அந்த நாராயண நம்பி நடக்கின்ற எழிலை, நான் எப்படி மறக்க முடியும்?

ஆயிரம் யானைகள் சூழ்ந்து வர, அந்த அழகுடையான் வருகின்றான்.

அவனை வரவேற்க, ஊரெல்லாம் பூரண பொற்கு ப்ம் வைத்திருக்கின்றனர்.

தோரணம் நா ட்டி, அந்தக் கார் வண்ணனுக்கு வரவு சொல்கின்றனர்.

இது மாத்திரமா?

இதோ! நாளைக்குத் திருமணம், நாளைக்குத் திருமணம் என்று, ஊரெல்லாம் ஒரே பாட்டாக இருக்கிறது.

மணப் பந்தலும், பாளைக் கமுகோடு பாங்காக அலங்கரிக்கப்பட்டிருக்கிறது.

கோளரியான என் நரசிம்மன், மாதவன், கோவிந்தன், ஒரு காளை போல் வந்து நிற்கக் கனாக் கண்டு, இன்பத்தால் கதறினேனடி!

(இசையோடு பாடுகிறாள்.)

"வாரணம் ஆயிரம் சூழவலஞ் செய்து
நாரணன் நம்பி நடக்கின்றான் என்று எதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறம் எங்கும்
தோரணம் நாட்டக் கனாக் கண்டேன், தோழி நான்"

"நாளை வதுவை மணம் என்று நாள் இட்டு
பாளைக் கமுகு பரிசு உடைப் பந்தற்கீழ்
கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர்
காளை புகுதக் கனாக் கண்டேன், தோழி நான்"

*கீதா :* கோதை! உன் பாட்டுக்கள் அத்தனையும் தேன்! உன் எண்ணங்கள்தான், கொடுந்தீயாக இருக்கின்றன.

உம்... நான் வரட்டுமா?

**கோதை :** நாளை வா. என் நாயகன் வண்ணத்தை இன்னும் பேசுகிறேன்.

*கீதா :* இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருப்பதை விட, பகவானே இல்லையென்று சொல்வது, பாபமான காரியமாகாது!

(கீதா அங்கிருந்து போகிறாள்.)

## காட்சி – 89

*பெரியாழ்வாரின் இல்லம்*

(பத்மா, பகவான் விக்கிரகத்திற்குத் திருமஞ்சனம் செய்யப் போகும்போது, அதைத் தடுக்கிறாள் கோதை.)

*கோதை :* அம்மா! பகவானுக்கு இனிமேல் நான்தான் திருமஞ்சனம் செய்து வைப்பேன்.

நான்தான் நைவேத்தியத்தை ஊட்டி விடுவேன்.

நான்தான் அவரைக் கண்வளரப் படுத்துவேன்.

*பத்மா :* என்னடி இது புதுப் பிரேமை!

பகவான், உனக்குத்தான் சொந்தம் என்று உரிமை கொண்டாடுகிறாயா?

*கோதை :* அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன்..

பகவானுக்கு உகப்பானவர்கள், இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும்.

தானே செய்ய வேண்டும் என்று முந்திக் கொண்டு வந்து நிற்கக் கூடாது.

*பத்மா :* பாருங்கள், இந்தப் பெண் பேசுவதை! பகவானை, இவள் கைக்குள் போட்டுக் கொள்ளப் பார்க்கிறாள்!

*பெரியாழ்வார் :* பகவானை விட்டு, யார் விலகி இருக்க முடியும்? அவனை மறுப்பவர்களும், அவனை மறப்பதில்லையே!

வானத்து நிலவை, சின்னக் குழந்தைகள் தங்களுக்கே சொந்தம் என்று சொல்வதில்லையா?

கோதை! உன் விருப்பப்படி, பகவானுக்கு நீயே எல்லாவற்றையும் செய்.

உன் அம்மா, பூஜை வேளையிலும், கறிக்கு புளியைக் கரைக்க வேண்டுமே என்று எண்ணிக் கொண்டிருப்பாள்.

## காட்சி – 90

*திருப்பாற்கடல்*

*ஸ்ரீதேவி :* சுவாமி! உங்களையே எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டிருக்கும் கோதைக்கு என்ன வழி காட்டப் போகிறீர்கள்?

*பகவான் :* நான் பூலோகத்தில் போய் அவதாரம் எடுப்பதைத் தவிர, வேறு வழியில்லை.

*ஸ்ரீதேவி :* அதற்கு நான் சம்மதிக்க மாட்டேன். உங்களை நம்பி, உங்கள் அவதாரமான ஸ்ரீராமனைக் கைப்பிடித்து, நான் பட்ட துன்பங்கள் போதாதா?

கோதைக்கும் அந்த அனுபவம் வர வேண்டாம்.

*பகவான் :* அப்படியானால் அவளை எப்படி மணம் செய்வது?

*ஸ்ரீதேவி :* வேறு மார்க்கத்தைப் பாருங்கள்.

அவதாரம் எடுத்து விட்டால், மானிடனாகவே மாறி, பூமிக்குள் இறக்கி விடுவீர்கள்!

பாவை நோன்பிருந்து, அந்தக் கோதை பாடுவதைக் கேளுங்கள். அவள் பேசுகின்ற தமிழ் தென்றலாகிச் சுகம் தருகிறது.

இப்படியொரு பிறவி, எனக்குக் கிடைக்காமற் போய்விட்டதே!

*பகவான் :* என் அருளுக்காக ஆழ்வார்கள் ஏங்குகிறார்கள்.

அவர்கள் பாசுரங்களுக்காக, நான் ஏங்குகிறேன்.

கோதை, செந்தமிழ்ச் சொற்களை வைத்துச் சித்திரம் தீட்டும் நேர்த்தியைப் பார்!

## காட்சி – 91

*நந்தவனம்*

(கீதா உடன் இருக்க, கோதை இசையோடு பாடுகிறாள்.)

"சிற்றஞ்சிறு காலே வந்து உன்னைச் சேவித்து உன்
பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்
பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்திற் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்று காண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்
மற்றை நம் காமங்கள் மாற்று ஏலோர் எம்பாவாய்"

## காட்சி – 92

*பெரியாழ்வாரின் இல்லம்*

*பெரியாழ்வார் :* கோதை! கண்ணன் பின் சென்ற மகளைக் குறித்து, அன்று ஆய்ப்பாடியில் உள்ள தாய்மார்கள் புலம்புவார்களாம்.

அவன் பகவான் என்ற ஞானம், அவர்களுக்கு இல்லாததுதான் காரணம்.

பெற்றெடுத்த பாசத்தால், ஒரு தாய் பேசுவதைக் கேள்!

வேடர் மறக்குலம் போல, அந்தக் கண்ண
என் மகளை வேண்டியபடி செய்து வி ' ர ரன்.

அவளோடு இப்போது வீடு குடி என்,
வாழுவானா?

நல்லதொரு கல்யாணத்தை அவளோ
செய்து கொள்வானா?

சகட உருவிலே வந்த அசுரனை அழித்
பெருமான், என்ன செய்வான் என்று அறி
முடியவில்லையே! - இப்படி அந்தத் தா
தவிக்கிறாள்.

இளமங்கையர், அவனை அடைய
தவிக்கின்றனர்.

அவர்களின் தாயார்கள், அவனைத் திருமண
பந்தத்தில் கட்டிவிடத் துடிக்கின்றனர்.

இந்தத் தவிப்பை, ஒரு பாடலாக இசைத்துப
பார்க்கலாம்.

(இசையோடு பாடுகிறார்.)

"வேடர் மறக்குலம் போலே
வேண்டிற்றுச் செய்து என் மகளைக்
கூடிய கூட்டமேயாகக்
கொண்டு குடி வாழுங் கொல்லோ?
நாடும் நகரும் அறிய
நல்லது ஓர் கண்ணாலம் செய்து
சாடு இறப் பாய்ந்த பெருமான்
தக்கவா கைப்பற்றுங் கொல்லோ?"

(இந்தப் பாடலைக் கேட்கின்ற கோதை, தீவிர சிந்தனை வயப்படுகிறாள்.)

# காட்சி – 93

*பெரியாழ்வாரின் இல்லம்*

(கோதை தனித்திருக்கிறாள்.

தன் மனத்தோடு பேசிக் கொண்டிருக்கிறாள்.)

*கோதை :* பெண்ணைப் பெற்ற தாய்மாரெல்லாம், என் பெருமானை, மருகனாக்கத் துடிக்கிறார்களா?

கல்யாணத்தைச் செய்து பார்த்து விட வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்களா?

வேடர் மறக் குலத்தைப் போல, அவன் என்னை வேட்டையாட வில்லை.

ஆனாலும், அவன்தான் என் மணாளன்.

என்தாய், இங்கு, எனக்காகப் பேச வில்லை.

அதனால் எனக்குத் தளர்ச்சியில்லை.

ஊர் காண நடக்க வேண்டிய கல்யாணத்தை, எங்கள்இருவர் உளம் காண முடித்து விடுகிறேன்.

என் தலைவனை, எனக்கு உரியவன் ஆக்கிக் கொள்கிறேன்.

வெறும் புலம்பலிலே பொருள் இல்லை. மணமுள்ள இந்த மாலை கொண்டு, திருமண பந்தத்தைத் தந்து விடுகிறேன்.

இனி நான் சூடிக் களைந்த மாலையை, அவன் சூடி மகிழட்டும்.

மாலை மாற்றுவது, திருமணத்தைக் குறிக்கும் மங்கலமாயிற்றே!

கேசவா! இனிமேல் தினந்தோறும், என் கழுத்தில் விழுந்த மாலையே, உன் திருக்கழுத்தை அலங்கரிக்கும்!

உன்னைக் கல்யாணம் செய்ய, இதுவொரு வழியெனக் கண்டு கொண்டேன்!

(இவ்வாறு கூறி, கூடையிலுள்ள மாலையை எடுத்து அணிந்து, தன்னை அழகு பார்த்துக் கொள்கிறாள்.)

*கோதை :* இந்திரன் உள்ளிட்ட தேவர்குழாம் எல்லாம் இங்கு வந்திருந்து, என்னை மணப்பெண் என்று சொல்லுகின்ற சொந்தத்தை, என் மனக் கண்ணால் காண்கிறேன்.

கோடிப் புடவை உடுத்தி, நாடிய மணமாலையும் நான் சூடி க் கனாக் காண்கிறேன்.

(இசையோடு மெதுவாகப் பாடுகிறாள்.)

"இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாம் எல்லாம்
வந்திருந்து என்னை மகட்பேசி மந்திரித்து
மந்திரக் கோடி உடுத்தி, மணமாலை
அந்தரி சூட்டக் கனாக் கண்டேன் தோழி நான்"

(இப்பொழுது பெரியாழ்வார் வருகின்ற அரவம் கேட்க,மாலையைக் கழற்றிக் கூடைக்குள் வைக்கிறாள்.)

## காட்சி – 94

*வடபத்ரசாயி கோயில்*

*அர்ச்சகர் :* (பெரியாழ்வாரிடமிருந்து மாலையை வாங்கியபடி...) இன்று மாலை, ஒளியோடும், மிக்க மணமோடும் இருக்கிறதே!

*பெரியாழ்வார் :* இன்று என் மனம் தீட்டுப்படாமல், அதிலே மாதவனே நிறைந்து இருந்திருப்பான்!

அதுதான் காரணம்.

(பெருமாளுக்கு மாலை சாத்தப்படுகிறது.)

## காட்சி – 95

*திருப்பாற்கடல்*

(பகவானின் கழுத்திலே அந்த மாலை வந்து விழுகிறது.)

*ஸ்ரீதேவி :* கோதை உங்களைக் கணவராக வரித்து விட்டாள்.

அவள் கழுத்து மாலை இது.

*பகவான் :* அவள் தீஞ்சுவைப் பாட்டு, இந்த மாலையை விட, என்னை மயக்குகிறது.

ஆயிரம் செவி கொண்டு பருகவேண்டிய அமிர்த கானம்! கேள் அதை!

## காட்சி – 96

*நந்தவனம்*

(தோழி கீதாவோடு கோதை...

கோதை இசையோடு பாடுகிறாள்.)

*கோதை :* "நால் திசைத்தீர்த்தம் கொணர்ந்து நனிநல்கி
பார்ப்பனச் சிட்டர்கள் பல்லார் எடுத்து ஏத்தி
பூப்புனை கண்ணிப் புனிதனோடு என்தன்னைக்
காப்புநாண் கட்டக் கனாக் கண்டேன் தோழி நான்"

*கீதா :* நீ இப்படிக் கனவிலேயே பிள்ளையும் பெற்று விடு! நான்,உன் பிள்ளையின் காதணி விழாவுக்கும் வந்து நிற்கிறேன்.

*கோதை :* நான் மாலை மாற்றியதைப் பற்றிக் கோபிப்பாய் என்று எண்ணினேன்.

*கீதா :* உன்னைக் கோபித்துப் பயன் இல்லை என்று விட்டுவிட்டேன்.

உன்னை விட்டுப் போகவும் எனக்கு மனமில்லை.

நீ மாலையும் மாற்றிக் கொள்வாய்!

ஆடையையும் மாற்றிக் கொள்வாய்!

*கோதை :* அப்படியும் செய்யலாமோ?

*கீதா :* அம்மா! தாயே! அப்படிச் செய்து விடாதே! உன் சேலை, உன் இடுப்போடு இருக்கட்டும்! பகவானுக்குக் கொண்டு போய் அதைச் சாத்தி விடாதே!

*கோதை :* நெஞ்சங்களே இடம் மாறிவிட்ட பொழுது, நெய்யப்பா ! ஆடைகள் மாறுவதிலே, என்ன தப்பு?

*கீதா :* இதற்கு மேல், இங்கு நின்றால் எனக்குத் தலை சுற்றும்.

எனக்கு உன்னைப் போல் கவிதை சொல்லத் தெரியாது.

கட்டியிருக்கிற சேலையைக் கிழித்துக் கொண்டு நிற்பேன்.

அந்த நிலைமை வருவதற்குள் சென்று விடுகிறேன்.

(போகின்ற தோழியைப் பார்த்துச் சிரிக்கிறாள் கோதை.)

## காட்சி – 97

*பெரியாழ்வாரின் இல்லம்*

(பெரியாழ்வார் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார். கோதை பரிமாறிக் கொண்டு இருக்கிறாள்.)

*பெரியாழ்வார் :* கோதை! இன்று என்ன வைபவம்?

திருக்கண்ணமுது பரிமாறுகிறாய்!

*பத்மா :* கோதை எதையோ மனதில் எண்ணிக் கொண்டு, இதையெல்லாம் செய்திருக்கிறாள். கேட்டால், மௌனமாகச் சிரிக்கிறாள்.

**கோதை :** இன்று பகவானுக்குப் படைப்பதற்காக, என் கையால், இந்தச் சுவைசேர் அமுதை, சொல்லொணா உகப்போடு ஆக்கினேன்.

**பெரியாழ்வார் :** பகவானுக்கு இன்றைக்கு என்ன விசேஷம்?

**பத்மா :** இவள் நினைத்து வி ' , ாள்! அதுதான் விசேஷம்!

**கோதை :** அப்பா! காலையில் எழுந்திருந்த போது, கரிய குருவிக் கூட்டங்கள், என் மாலின் வரவு சொல்லிப் பாடுவதுபோல் உணர்ந்தேன்.

சோலைமலைப் பெருமான், துவராபதி எம்பெருமான், ஆலின் இலைப் பெருமான், நம் இல்லம் வருவதறிந்து, வகை வகையாகக் கறி செய்தேன்.

(இசையோடு, மெதுவாகப் பாடுகிறாள்.)

"காலை எழுந்திருந்து கரிய குருவிக் கணங்கள்

மாலின் வரவு சொல்லி, மருள்பாடுதல் மெய்ம்மை கொலோ?

சோலைமலைப் பெருமான், துவராபதி எம்பெருமான்

ஆலின் இலைப்பெருமான் அவன் வார்த்தை உரைக்கின்றதே"

**பெரியாழ்வார் :** ஆஹா! அற்புதம்! அற்புதம்!

கோதை! பக்தியிலே நீ என்னையும் மிஞ்சி வி ' , ாய்!

நாவுக்கு அமுது பரிமாறினாய்!

செவிக்கும் நல்லமுது பரிமாறிவிட்டாய்!

தமிழ் உன் நாவிலே நர்த்தனமாடுவது கண்டு, உகக்கின்றேன் அம்மா!

நான் வளர்த்த கிளியும், என்னைப் போல எம்பெருமானைப் பேசுகிறது, பத்மா!

**பத்மா :** அப்பாவும் மகளும் ஒன்று சேர்ந்து விட்டீர்கள். நான்தான் தனித்து இருக்கின்றேன். எனக்குப் பாடத் தெரியாததால், எம்பெருமானிடம் ஈடுபாடு இல்லை என்று அர்த்தமாகாது.

**பெரியாழ்வார் :** யார் சொன்னது அப்படி?

நீ அடுக்களையில் நெருப்பு மூட்டுவது, ஹோமத்தில் அக்கினி வளர்ப்பதற்குச் சமானம்!

நீ காய்கறியா நறுக்குகிறாய்? என் பெருமாளைப் பேசாதாரின் அகந்தையை நறுக்கித் தள்ளுகிறாய்!

(பெரியாழ்வாரும் கோதையும் சிரிக்கின்றனர்.)

## காட்சி – 98

*திருப்பாற்கடல்*

(மாலையும் கழுத்துமாகப் பகவான் இருக்கிறார்.)

*ஸ்ரீதேவி :* இப்படித் தினசரி கோதையின் கழுத்து மாலையைப் போட்டுக் கொண்டு, அழகு பார்க்கிறீர்களே!

அவள் காதல் உள்ளத்தைப் பெரியாழ்வாருக்குத் தெரிவிக்க வேண்டாமா?

அவள் தங்களைப் பாடிப் பாடி, பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறாளே!

அந்த மூச்சுக் காற்றின் வெப்பத்தால், ஆதிசேஷனின் மேனி சுடுகிறதே!

இந்தத் துன்பத்தைக் களைந்து, தோகை அவளைக் குளிர்விக்கக் கூடாதா?

அதற்கோர் வழியைக் காட்டக் கூடாதா?

ஆழ்வாருக்கு ஒரு மொழி சொல்லக் கூடாதா?

**பகவான் :** அவள் தமிழ் கேட்க, எனக்கு ஆசை. அந்த அவதாரம் முடிந்து விட்டால், இப்படித் தித்திக்கும் தமிழை, அவளிடமிருந்து கேட்க முடியுமா?

இதோ, அவள் பாடுவதைக் கேள். அமுத மழையைச் சாரலாக்கித் தருகிறாள். அதில் நனைகின்ற சுகம், நமக்கு மிக உகப்பானது.

(கோதை பாடுவது கேட்கிறது.)

(பகவானும் ஸ்ரீதேவியும், அதில் லயித்து இருக்கின்றனர்.)

"கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ?
மருப்பு ஒசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல் ஆழிவெண் சங்கே"

## காட்சி – 99

*வடபத்ர சாயி கோயில்*

(பெரியாழ்வாரிடமிருந்து வாங்குகிற மாலையில், நீண்ட கேசம் இருப்பதைப் பார்த்துப் பதறுகிறார் அர்ச்சகர்.)

*அர்ச்சகர் :* ஆழ்வார்! என்ன இது! பெருமாளுக்குச் சாத்த வேண்டிய மாலையிலே, மனிதர்களின் கேசம் இருக்கிறது!

யாரோ மாலையை எடுத்து அபச்சாரப் படுத்தியிருக்கிறார்கள்!

அதைக் கொண்டு வந்து கொடுக்கிறீரே! நீர் ஆயிரம் பாட்டுப் பாடினாலும், இந்தப் பெரும் பாவத்தைப் போக்க முடியுமா?

(இவ்வாறு கூறி, மாலையை வீசி எறிகிறார்.

ஆழ்வார் நடுநடுங்கி, அர்ச்சகரின் காலடியில் விழுந்து கும்பிடுகிறார்.)

*பெரியாழ்வார் :* அடியேன் அறியாமற் செய்த கொடுமையைப் பொறுக்க வேண்டும்.

மாலை தீட்டுப்பட்டு விட்டது, எனக்குத் தெரியவே தெரியாது.

இதற்காக, என் கையை முறித்துக் கொள்வதுதான் பரிகாரம் என்றால், அதையும் செய்யக் காத்திருக்கிறேன்!

*அர்ச்சகர் :* எழுந்திரும்... எழுந்திரும்... உம்மை எனக்குத் தெரியாதா? பெருமாளுக்குந்தான் உம்மைத்

தெரியாதா? இனிமேல், மாலை, யார் கையிலும் படாமல் எடுத்து வாரும்.

அவனுக்குப் படைப்பது புனிதமாக இருக்க வேண்டும்.

பெருமாள் சூட வேண்டிய மாலையைத் தீட்டாக்கி விட்ட அரக்கியும், இந்த லோகத்தில் இருக்கிறாளா?

அதிர்ச்சியாக இருக்கிறது!

ஆழ்வார்! இங்கு ஏன் அழுது கொண்டு நிற்கிறீர்?

*பெரியாழ்வார் :* பெருமாள் என்னை அடித்து உதைத்துத் துன்புறத்த வில்லையே என்று அழுகிறேன்!

பெருமாள் சார்பாக, அந்தக் கைங்கர்யத்தைத் தாங்கள் செய்யக் கூடாதா?

என்னை உதைத்து அனுப்பினால், என் புண்பட்ட மனதிற்கு, அது ஒத்தடமாக இருக்கும்.

*அர்ச்சகர் :* நீர் வெம்பி வேதனைப் பட்டுப் பேசியது போதும்.

உம் கையிலுள்ள கறையை, உம் கண்ணீர் கரைத்து விட்டது.

ஆரத்தி காட்டுகிறேன். சேவித்து விட்டுப் போய்வாரும்.

## காட்சி – 100

*பெரியாழ்வாரின் இல்லம்*

*பெரியாழ்வார் :* நான் பெருமாளுக்குக் கொண்டு போன மாலையிலே, ஒரு பெண்ணின் கேசம் இருந்திருக்கிறது!

இந்தப் பாதகத்திற்கு என்னை ஆளாக்கி விட்ட பாவி யார் என்று எனக்குத் தெரியவில்லை.

கோதை! நான் கல்யாணமே செய்திருக்கக் கூடாது!

என் கைங்கர்யத்திற்கு இப்படிப் பங்கம் வராமல் இருந்திருக்கும்!

*பத்மா :* யாரைப் பார்த்துக் குற்றம் சொல்கிறீர்கள்? பெருமாளுக்குரிய மாலையைப் போட்டு அழகு பார்க்க, என் புத்தி கெட்டா போய்விட்டது?

சூர்ப்பனகை கூட, இந்தக் காரியத்தைச் செய்ய மாட்டாள்!

*பெரியாழ்வார் :* பெண்களை நம்பித்தான், கிருகாஸ்ரமத்தில் இருக்கிறோம்.

அவர்கள் கொல்லும் நஞ்சாக, உடன் வாசம் செய்து கொண்டிருந்தால், என்ன செய்வது?

*பத்மா :* (அழுதபடி) என்ன பேசுகிறீர்கள்?

நஞ்சை எடுத்து, எனக்கு உண்ணக் கொடுங்கள்!

சாப்பிட்டு விட்டு, மஞ்சளோடு போய்ச் சேருகிறேன்!

பாசுரம் பாடிய வாயால், இப்படிப் பாஷாணத்தை உமிழாதீர்கள்!

*கோதை :* அப்பா! அம்மாவை வார்த்தைகளால் வதைக்காதீர்கள்.

பழி செய்தவள் யாரோ?

விழி சிவக்க, அம்மா அழுது கொண்டிருப்பது, நியாயமல்ல.

சாப்பிட வாருங்கள், அப்பா!

*பெரியாழ்வார் :* இன்று மாலையில்லாமல் என் பெருமாள் இருக்க, நான் வேளை தவறாமல் சாப்பிட்டுக் கொண்டிருப்பதா?

என் வயிற்றிலே இன்று பசித்தீ இருந்தால்தான், என் நெஞ்செரியும் வேதனை குறையும்!

எனக்காக யாரும் பட்டினி கிடக்க வேண்டாம். போஜனத்திற்கும் போகத்திற்கும்தானே, கல்யாணம் செய்து கொண்டார்கள்!

## காட்சி – 101

நந்தவனம்

(அதிகாலையில் நந்தவனத்தில் பூக்கொய்து கொண்டிருக்கிறார் பெரியாழ்வார்.)

*பெரியாழ்வார் :* (தனக்குத் தானே பேசிக் கொள்கிறார்.)

மாலையிலே கேசம் வந்த மாயத்தை நான் அறியேன்.

அர்ச்சகர் கண்ணிற்பட்ட கேசம், நேற்றுத் தான் இருந்ததா?

இந்தக் கொடுமை நிதம் நிதம் நடந்து கொண்டிருக்கிறதா? பெருமாளே! உன் பிரசாதந் தான், எங்களுக்கு அமிழ்து!

எங்களிடம் மிஞ்சியதை, உன் சந்நிதியில் வைக்கலாமா?

இதனால் உனக்கு ஒரு ஊறு ஏற்பட்டால், என் மனம் ஒடிந்து விடாதா?

நீ உடுத்திக் களைந்த பட்டு ஆடையை, நாங்கள் உடுத்திக் கொண்டால், உய்வு பெறுவோம்.

நீ உண்டதை உண்டும், நீ சூடிக் களைந்த மாலையைச் சூடியும், நலம் பெறுவோம்.

இதற்கு மாறாக இப்போது நடந்து விட்டதே! என் மனம் பதற, உன் சுகம் வேண்டி, உனக்குப் பல்லாண்டு பாடுகிறேன், அப்பா!

(இசையோடு பாடுகிறார்.)

"உடுத்துக் களைந்தநின் பீதக ஆடை
யுடுத்துக் கலத்ததுண்டு
தொடுத்த துழாய் மலர் சூடிக் களைந்தன
சூடுமித் தொண்டர்களோம்
விடுத்த திசைக்கருமம் திருத்தித் திரு
வோணத் திருவிழவில்
படுத்தபைந்நாகணைப் பள்ளி கொண்டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே"

## காட்சி – 102

*பெரியாழ்வாரின் இல்லம்*

(பூக்குடலையோடு வீட்டிற்கு வருகிறார் பெரியாழ்வார்.)

*பெரியாழ்வார் :* *கோதை! இனிமேல் நீயும் நானுமே பூத்தொடுக்கலாம்.*

*வேறு யாரும் இந்தக் கைங்கர்யத்தில் கலந்து கொள்ள வேண்டாம்.*

*கையும் களவுமாகப் பிடிபட்டால்தான், கள்ளன் என்று ஆகுமா?*

*பத்மா :* *அந்தப் பெருமாள் என்னை நம்புவார்! கட்டிய புருஷன் நம்பவில்லை என்பதற்காக, தீக்குளிக்க முடியுமா?*

*அப்படித் தீக்குளித்துத்தான், அந்தச் சீதை என்ன சுகத்தைக் கண்டாள்?*

*அப்பாவும் மகளுமே மாலையைக் கட்டுங்கள். வேண்டாதவள் கைபட்டு, என் மல்லிகைப்பூ கருத்து விட்டது என்று உரத்த குரலில் பேச ஆரம்பித்து விடுவார்.*

(அப்பாவும் மகளும் அமர்ந்து பூத்தொடுக்கின்றனர்.)

*பெரியாழ்வார் :* *கோதை! கொஞ்சம் திருத்துழாய் பறித்துக் கொண்டு வந்து விடுகிறேன்.*

***கோதை :*** போய் வாருங்கள், அப்பா.

அதற்குள், நான் மாலை கட்டி முடித்து விடுகிறேன்.

***பெரியாழ்வார் :*** உன் அம்மா நிழல், இங்கு படாமல் பார்த்துக் கொள்.

(இவ்வாறு கூறிவிட்டு வெளியேறுகிறார். வெளியே சென்றவர், வாயிலிலேயே மறைந்து நிற்கிறார்.

யாரும் அறியாமல், அடிக்கடி, உட்புறமும் பார்க்கிறார்.)

***கோதை மனது :*** மனையாள் அணிந்த மாலையை, மணவாளன் அணியக் கூடாதா? அதற்கு இவ்வளவு ஆர்ப்பரிப்பா? இதை வெளியில் சொன்னால், பூகம்பம் வெடித்து விடுமோ என்று அஞ்சுகிறேன்!

என் மாலையைச் சூடிக் கொண்டவர், இதற்கு ஒரு மார்க்கத்தைக் காட்டட்டும்.

பாவம் அம்மா! எங்கள் விளையாட்டில், அவள் தலை உருண்டு கொண்டிருக்கிறது!

நேற்று முழுதும், என் கண்ணாளர், என் மாலையில்லாமல் வாடியிருப்பார்!

அவருக்கு அதனால் உறக்கம் கூட வந்திருக்காது!

இன்று அப்படி அவரை நான் ஏங்கவிட மாட்டேன்.

என் தோள் தழுவப் போகிறவர், என் தோள் தழுவிய மாலையை, முதலில் தழுவட்டும்.

(கோதை, மாலையை எடுத்துத் தன் மார்பில் அணிந்து கொள்ள, இதைப் பார்க்கின்ற பெரியாழ்வார், அதிர்ந்து உள்ளே ஓடி வருகிறார்.)

***பெரியாழ்வார் :*** (அண்டமே அதிரும்படி, உரத்த குரலில்)

கோதை! என்ன காரியம் செய்து விட்டாய்?

(இந்த அமளி கேட்டு, அங்கு வருகின்ற பத்மாவும், கோதையின் இந்தக் கோலத்தைப் பார்த்து, அதிர்ச்சியுற்று நிற்கிறாள்.

பெரியாழ்வார், தன் முகத்தில் மாறி மாறி அறைந்து கொண்டு, குலுங்கக் குலுங்க அழுகிறார்.

பத்மாவும் வாய்விட்டு அழுகிறாள்.

இதையெல்லாம் காணப் பொறுக்க முடியாமல், கழுத்தில் மாலையோடு, கீழே சரிந்து விழுந்து, கோதையும் அழுகிறாள்.)

## காட்சி – 103

*திருப்பாற்கடல்*

*ஸ்ரீதேவி :* ஏன் இப்படி எல்லாரையும் அழ வைத்துப் பார்க்கிறீர்கள்!

அசோக வனத்தில் நான் அழுதது போதாதா?

*பகவான் :* கோதை, தன் காதல் உள்ளத்தை, ஆழ்வாரிடம் தெரிவித்தால் என்ன? தடுப்பார் யார்?

*ஸ்ரீதேவி :* பெண்ணுக்குரிய பேதைமையால், அவள் தடுமாறுகிறாள். உங்கள் உதவியை, அதனால் நாடுகிறாள்.

நீங்கள் இப்பொழுது கோதையின் மகிமையை ஆழ்வார்க்கு உணர்த்தி விடுங்கள்.

இல்லையென்றால், அவர் தீ வளர்த்து இறங்கி விடுவார்!

*பகவான் :* உன் சொற்படி நடக்கிறேன் ஸ்ரீதேவி.

என்று உன் சொல்லை, நான் மீறியிருக்கிறேன்?

மாயமானைப் பிடிக்கச் சொன்னபோதும், துரத்திக் கொண்டு ஓட வில்லையா?

தொல்லைகளை அதனால் சந்திக்க வில்லையா?

சுகமளிப்பவள் சோகத்தையும் சேர்த்தளிப்பாள்!

அவள்தானே மனையாள்!

## காட்சி – 104

*பெரியாழ்வாரின் இல்லம்*

*நள்ளிரவு நேரம்*

(சுவரிலே சாய்ந்தபடி உறங்கிக் கொண்டிருக்கிறார் பெரியாழ்வார். அவர் கனவிலே பெருமாள் தோன்றுகிறார்.)

*பகவான் :* ஆழ்வாரே! மாலை தீட்டாகி விட்டது என்று மனம் கலங்க வேண்டாம்.

கோதை சூடிக் கொடுத்த மாலை, நமக்கு உகப்பானது தான்!

அதை எமக்குச் சாத்தி மகிழலாம்! கோதை, தன் அன்பால், எம்மை ஆண்டுவிட்டாள்!

எம்மை ஆண்டாள் அவள்! 'ஆண்டாள்' என்னும் அழகுத் திருநாமம் அவளுக்கே உரியது!

நடந்ததெல்லாம் நமக்கு உகப்பானதே!

(கனவு கலைய விழித்துப் பார்க்கிறார் பெரியாழ்வார்.

முகமலர்ச்சியோடு, தலை மீது கைவைத்துச் சேவிக்கிறார்.)

## காட்சி – 105

*அர்ச்சகர் இல்லம்*

*நள்ளிரவு நேரம்*

(திடீரெனக் கண் விழித்து, எழுந்து அமர்கிறார் அர்ச்சகர்.)

*அர்ச்சகர் :* ஆண்டாள்! ஆண்டாள்! பெருமாள், அந்தக் கோதைக்கு, 'ஆண்டாள்' என்ற நாமம் இட்டுப் பெருமைப்படுத்தி விட்டார்!

மாலை தீட்டுப்படவில்லை!

தமக்கு உகப்பாகச் சூடிக் கொடுக்கப்பட்டது என்று கூறிவிட்டார்!

விடிந்ததும் ஆழ்வாரோடு பேச வேண்டும்.

அந்தச் சூடிக் கொடுத்த சுடர்க்கொடியைக் கை குவித்துச் சேவிக்க வேண்டும்!

## காட்சி – 106

*பெரியாழ்வாரின் இல்லம்*

*அதிகாலை நேரம்*

(அர்ச்சகர், பெரியாழ்வாரின் இல்லத்திற்கு ஓடி வந்து, தான் கண்ட கனவைக் கூறுவதும், இருவரும் மெய்ச் சிலிர்ப்போடு, தங்கள் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்வதும், இந்த ஆரவாரம் கேட்டுப் பத்மாவும் கோதையும் அங்கு வருவதும், அர்ச்சகரும் பெரியாழ்வாரும், கனிவோடும் பிரமிப்போடும் கோதையிடம் பேசுவதும், அர்ச்சகர் கோதையைக் கையெடுத்துக் கும்பிடுவதும், கோதை இதையெல்லாம் கேட்டு, உணர்ச்சி மிகுதியால் அழுவதும், சிரிப்பதும், இரண்டையும் சேர்த்துச் செய்வதும், ஓசையின்றிக் காட்டப்படுகின்றன.)

(இவை நடக்கும் பொழுதெல்லாம், பின்னணியாகப் பெரியாழ்வாரின் பாசுரம் ஒன்று ஒலிக்கிறது.)

“நன்மை தீமைகள் ஒன்றும் அறியேன்
    நாரணா! என்னும் இத்தனை அல்லால்;
புன்மையால் உன்னைப் புள்ளுவம் பேசிப்
    புகழ்வான் அன்று கண்டாய், திருமாலே!
உன்னுமாறு உன்னை ஒன்றும் அறியேன்
    ஓவாதே நமோ நாரண! என்பன்;
வன்மை ஆவது உன் கோயிலில் வாழும்
    வைட்டணவன் என்னும் வன்மை கண்டாயே!”

## காட்சி – 107

*மேக மண்டலம்*

(ஆண்டாள் உவகைப்பெருக்கால், கற்பனையில் திளைக்கிறாள்.

மேக மண்டலத்தில், அவள் நீந்துவதுபோல் உணர்கிறாள்.

வானத்து நட்சத்திரங்களிடையே நடந்து செல்கிறாள்.

தன் கூத்தாடும் உள்ளத்தை இசையாக்கிப் பாடுகிறாள்.)

"எழில் உடைய அம்மனைமீர்! என் அரங்கத்துஇன்னமுதர்
குழல் அழகர், வாய் அழகர், கண் அழகர், கொப்பூழில்
எழு கமலப்பூ அழகர்; எம்மானார் என்னுடைய
கழல் வளையைத் தாமும் கழல் வளையே ஆக்கினரே!"

## காட்சி – 108

*வில்லிப்புத்தூர் வீதி*

(வீதியிலே பூக்குடலையோடு பெரியாழ்வார் நடக்க, உடன் வருகிறாள் ஆண்டாள்.

ஒவ்வொரு வீட்டிலிருந்தும், பெண்களும் ஆண்களும் வெளிப்பட்டு, ஆண்டாள் முன் விழுந்து சேவிக்கின்றனர்.)

(இதைப் பார்த்து ஆண்டாள் நடுநடுங்குகிறாள்.

ஒரு பெரியவரும் விழுந்து கும்பிட்டு விட்டு எழுந்து நிற்கிறார்.

அவர் செய்கையைப் பார்த்துப் பதறுகிறாள் ஆண்டாள்.)

*பெரியவர் :* அம்மா! ஆண்டாள்! பகவானையே ஆண்டவள் நீ!

என்னை ஆசீர்வதியம்மா!

*ஆண்டாள் :* பெரியவரே! உங்கள் பேத்தியிடம் நீங்கள் இப்படிப் பேசலாமா?

உங்களைப் போன்றவர்களின் வாழ்த்துத்தான், என்னை வாழ வைக்கும்!

*பெரியாழ்வார் :* எல்லாரும் என் மகளைக் கோபுரத்திலே ஏற்றி வைத்து விடாதீர்கள்!

அவள், இந்த வில்லிபுத்தூர் வீதியிலே, மடியிலே குழந்தையோடு ந ாட வேண்டியவள்!

## காட்சி – 109

*பெரியாழ்வாரின் இல்லம்*

*பத்மா :* பெருமாளின் செல்லப் பெண்ணாக நம் கோதை இருக்கிறாள்.

'ஆண்டாள்' என்னும் நாமம் இட்டு, அவன் அன்பைக் காட்டியிருக்கிறான்.

அதற்காக, ஊரார் அவளைப் பூப்போட்டு அர்ச்சிப்பதா?

வாழவேண்டிய பெண்ணை, விக்கிரகமாக வழிபட ஆரம்பித்து விடுவார்கள்!

உடனே, அவளுக்கொரு கல்யாணத்தைப் பண்ணி வையுங்கள்.

*பெரியாழ்வார் :* மாந்தோப்பு மாதவன் மகனைப் பேசி முடிவு செய்து விடலாம்.

*பத்மா :* இப்பொழுதே அங்கு புறப்பட்டுப் போங்கள்.

கண்டெடுத்த குழந்தை என்பதற்காக, காலத்திலே செய்து வைக்க வேண்டிய கல்யாணத்தைச் செய்யாமல் விட்டுவி ால், நாளை இதே ஊர் பழிக்கும்!

நம் நெஞ்சே நம்மைச் சுடும்!

நான் மலடி ஆகாமல், என் மடி கனக்க வந்தவளைப் படரத் துணையில்லாமல், தனியே தவிக்க விடுவதா?

*பெரியாழ்வார் :* இதோ புறப்பட்டு விட்டேன்.

(பெரியாழ்வார் வெளியேற, இதையெல்லாம் கலக்கத்தோடு பார்த்துக் கொண்டிருக்கிறாள் ஆண்டாள்.)

## காட்சி – 110

நந்தவனம்

(தோழி கீதாவோடு, நந்தவனத்திலே இருக்கின்ற ஆண்டாள், மிக்க வாட்டத்தோடு இருக்கிறாள்.)

*கீதா :* கோதை! இல்லை... ஆண்டாள்!

இந்தப் பெயர் பெருமாளால் கிடைத்து விட்டதால், நீ மானிடப் பிறவி என்ற உண்மையை மறந்து விடுவது சரியல்ல!

உன் தந்தை பார்க்கின்ற மணாளனுக்கு மாலை சூடு.

ஆகாயத்திலே மிதக்காமல், நிலத்திலே காலூன்றி நில்!

பகவானைப் பகவானாகப் பார்!

மானிடன் ஒருவனுக்கு மனையாள் ஆகி, நல்லறங்களை நலிவின்றிச் செய்.

இதுதான் விதிக்கப்பட்ட வாழ்க்கை!

துதிக்கப்பட வேண்டியவரை, உன் தோளோடு சேர்த்தணைக்க நினைக்காதே!

மாந்தோப்பு மாதவன் மகனுக்கு, மனப் பூர்வமாக உன் சம்மதத்தைத் தெரிவித்து விடு.

*ஆண்டாள் :* வானிடை வாழும் அவ் வானவர்க்கென்று, மறையவர் வேள்வியில் வகுத்த அவி, கானிடை திரிகின்ற ஓர் நரி, முகர்வதும் சுவைப்பதுவும் போல, ஆழி சங்கு உடைய என் அண்ணலுக்கென்று கிளர்ந்தெழுந்த என் உடலை, மானிடர்க்கென்று

பேசி முடிப்பார்களாயின், நான் உயிர் வாழ மாட்டேன்!; இது உறுதி கீதா!

*கீதா :* உன் தோழி என்பதால், உன் துக்கத்தைப் பங்கிட்டுக் கொள்கிறேன்.

என்னால் வேறு என்ன செய்ய இயலும்?

உன் பாடலும் இசையுந்தான், உன் மனதுக்கு ஆறுதலைத் தர வேண்டும்.

*ஆண்டாள் :* என் ஏக்கமும் துக்கமும், அவன் திருச் செவிக்கு எட்டத்தான், பாடுகிறேன்; பாடுகிறேன்.

என் கானம், காற்றோடு கலந்து போய், அவன் கவனத்தைக் கவராதா என்று...

(இசையோடு பாடுகிறாள்.)

"வானிடை வாழும் அவ்வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்த அவி
கானிடைத் திரிவது ஓர் நரி புகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வது ஒப்ப
ஊனிடை ஆழிசங்கு உத்தமர்க்கு என்று
உன்னித்து எழுந்தஎன் தட முலைகள்
மானிடவர்க்கு என்று பேச்சுப் படில்
வாழகில்லேன் கண்டாய் மன் மதனே"

## காட்சி – 111

பெரியாழ்வாரின் இல்லம்

*பத்மா :* (ஆண்டாளைப் பார்த்துக் கோபத்தோடு)

என்ன சொல்கிறாய்? மானிடனை மணக்க மாட்டாயா?

கல்யாணத்தை உறுதி செய்ய வருகிறார்கள் இப்பொழுது இந்தப் பேச்சு பேசுகிறாயே!

*பெரியாழ்வார் :* அம்மா ஆண்டாள்! தெளிந்த சிந்தனை யோடுதான் நீ பேசுகிறாயா?

*ஆண்டாள் :* ஆமப்பா - அதில் உங்களுக்கு ஐயம் வேண்டாம்.

எனக்குக் கல்யாணமென்றால், அது பகவானோடுதான்!

*பெரியாழ்வார் :* அது நடக்கவே நடக்காது!

*ஆண்டாள் :* உங்கள் ஆசீர்வாதம் அப்படியிருந்தால், நான் கன்னியாகவே காலங்கழித்து விடுகிறேன்!

*பெரியாழ்வார் :* ஆண்டாள்! உன்னை வளர்த்து விட்ட உரிமையிலே கேட்கிறோம்.

பித்துப் பிடித்தவள் போல் பேசாமல், இந்தக் கல்யாணத்திற்கு ஒப்புக் கொள்.

*பத்மா :* நீ வளர்ந்து விட்டதால், உன்னை அடித்துத் திருத்த முடியவில்லை.

அதைச் சாதகமாக்கிக் கொண்டு, வானத்துச் சந்திரன், என் வட்டிலிலே வந்து விழவேண்டும் என்று பேசிக் கொண்டிராதே!

*ஆண்டாள் :* மண்ணிலே புழுப் போல கிடந்த என்னை, மகுடம் சூட்டி ஆளாக்கி விட்டீர்கள்!

அதற்காக ஆயிரம் பிறவி எடுத்து, உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும் !

இப்பொழுது என் எண்ணப்படி, கல்யாணம் செய்து கொள்ள அனுமதியுங்கள்!

அதற்கு உங்களுக்கு விருப்பம் இல்லை யென்றால், உறவைஅறுத்தெறிந்து விட்டு, வெளியே வீசி எறியுங்கள்!

மீண்டும் மண்ணிலே போய் புரள்கிறேன்!

யார் மறுத்தாலும், மண் மாதா, என்னை ஆதரிக்க மறுக்க மாட்டாள்!

ஆதரவு அற்றவர்க்கெல்லாம், அவள்தானே அடைக்கலம்!

**பெரியாழ்வார் :** இதுதான் முடிவான பேச்சா?

**ஆண்டாள் :** முடிந்துவிட்ட பேச்சப்பா!

**(கண்ணில் கண்ணீரோடு வெளியேறுகிறார் பெரியாழ்வார். பத்மாவும் கோபத்தோடு ஆண்டாளைப் பார்த்து விட்டு, அடுக்களைக்குள் சென்று விடுகிறாள்.)**

## காட்சி – 112

*வடபத்ர சாயி கோயிற் சந்நிதி*

**பெரியாழ்வார் :** பகவானே! கோதையின் மனம் நோகக் கூடாதே என்று, அவள் சூடிக் களைந்ததைச் சூடிக் கொண்டாய்!

ஆண்டாள் என்ற நாமத்தையும் கொடுத்து, அன்பொழுக அவளைப் பார்த்தாய்!

உன் கருணையைப் புரிந்து கொள்ளாமல், அந்தப் பேதைப் பெண்,உன்னைக் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பேசுகிறாளே!

இவள் காலம் முழுவதும் கன்னியாகவே இருக்க வேண்டியதுதானா?இதற்காகவா, என் கையில் இவளை ஒப்படைத்தாய்?

அணிந்து கொள்வார் இல்லாவிட்டால், பெண்ணுக்கும் பொன்னுக்கும் என்ன மதிப்பு?

படராமல் அந்தக் கொடி, என் வீட்டில் இருந்தால், என் தலையில் பாரம் இருக்குமப்பா!

என் நெஞ்சில் நெருப்பு எரிந்து கொண்டிருக்குமப்பா!

இளம் தளிரான அவள் கன்னி கழியாமல் வெம்பி இருக்கும் பொழுது, முதிர்ந்த சருகான நான், அவள் பார்க்க, குடும்பத்தில் உழல்வது கொடுமை இல்லையா?

இனிமேல் நந்தவனத்திலேயே நான் இருக்கிறேன்!

நான் வளர்க்கும் செடிகளோடு சேர்ந்து வாழ்கிறேன்!

அந்தப் பெண்ணைப் பேசவும் எனக்கு வலிவில்லை!

அந்தப் பெண் பார்க்க வாழவும் எனக்கு மனமில்லை!

இது எல்லாமே உன் லீலைதான்!

(சேவித்து விட்டுக் கண்ணீரோடு சந்நிதி விட்டுப் போகிறார்.)

## காட்சி – 113

*பெரியாழ்வாரின் இல்லம்*

*இரவு நேரம்*

*பத்மா :* (அழுகையோடு ஆத்திரத்தோடு)

*யாருக்காக யார் வீட்டை விட்டுப் போவது? நந்தவனத்திலே இருக்கப் போகிறாராம்! நந்தவனத்திலே இருக்க வேண்டியவர்களை நடுக்கூடத்திலே இருத்தி விட்டு, இவர் ஏன் நந்தவனத்தில் இருக்க வேண்டும்?*

*பிள்ளை இல்லையென்று பாம்புக் குட்டியை யாராவது எடுத்து வளர்ப்பார்களா?*

*நான் வளர்த்தேன் அப்படி!*

வயதான காலத்தில் அவர் நந்தவனத்து மண்ணிலே புரண்டு கொண்டிருக்க, நான் இங்கு கட்டிலிலே சயனித்திருக்க முடியுமா?

இவளே இங்கு இருந்து ஆண்டு அனுபவிக்கட்டும்!

நானும் நாளை நந்திக்கிராமம் போய் விடுகிறேன்!

என் இராமன் இருக்குமிடம்தான் எனக்கு அயோத்தி!

(வீட்டின் அடுத்த பகுதியிலிருந்து இதைக் கேட்கின்ற ஆண்டாள், பொங்கிப் பொங்கி அழுகிறாள்.)

## காட்சி – 114

*திருப்பாற்கடல்*

*ஸ்ரீதேவி :* (கோபத்தோடு) ஆரம்பித்து விட்டீர்களா, உங்கள் அலகிலா விளையாட்டை?

பெண் என்றாலே, கண்ணீர் விடவேண்டும் என்று எந்த வேதத்தில் சொல்லியிருக்கிறது?

*பகவான் :* பொறு தேவி - ஆண்டாளுக்கு நாம் ஒரு வழியைக் காட்டுவோம்.

உருக்கமாகச் சொல்லப்படும் கதைதான் யுகந்தோறும் மனிதர்களுக்குப் பாடமாக இருக்கும்.

அதற்குத்தான் இந்த நாடகம்.

சீதையின் கண்ணீரும், திரெளபதியின் கதறலும், எத்தனை நீதிகளை அழியாத கல்வெட்டுப் போல, அவனிக்குச் சொல்லி விட்டன!

*ஸ்ரீதேவி :* உலகத்திற்கு நீதி சொல்ல, நாங்கள் அழுதது போதும்!

இனிப் பொறுப்பதற்கில்லை!

*பகவான் :* புரிந்து கொண்டேன்.

## காட்சி – 115

*நந்தவனம்*

*நள்ளிரவு நேரம்*

(நந்தவனத்து மண்ணிலே படுத்து உறங்கும் பெரியாழ்வாரின் கனவிலே, பெருமாள் தோன்றுகிறார்.

பெருமாள், பெரியாழ்வாரின் பாசுரத்தை, அவரிடமே இசையோடு பாடிக் காட்டுகிறார்.)

*பகவான் :*

"காறை பூணும் கண்ணாடி காணும் தன்
கையில் வளை குலுக்கும்
கூறை உடுக்கும் அயர்க்கும் தன்
கொவ்வைச் செவ்வாய் திருத்தும்
தேறித் தேறி நின்று ஆயிரம் பேர்த்
தேவன் திறம் பிதற்றும்
மாறில் மா மணிவண்ணன்மேல் இவள்
மால் உறுகின்றாளே"

*பெரியாழ்வாரே! இப்படி ஓர் ஆயர்குல மங்கை, என்மேல் காதலாக இருப்பதை, அவள் தாய் பேசுவதாகப் பாடினீர்!*

*இதை ஏன் ஆண்டாளுக்காக, நீரே பாடியதாக எடுத்துக் கொள்ளக் கூடாது?*

*உம் புத்திரி ஆண்டாளோடு, திருவரங்கம் வாரும்.*

*அவளை நாமே பாணிக்கிரஹணம் பண்ணுகிறோம்.*

(விழித்து எழுந்து பெரியாழ்வார், உவகை மிகுதியால் கூத்தாடிக் கொண்டே வீட்டை நோக்கிச் செல்கிறார்.

'ஓம் நமோ நாராயணா!' என்ற மூல மந்திரம், இப்பொழுது காற்று வெளியிடை எங்கும் ஒலித்துக் கொண்டிருக்கிறது.)

## காட்சி – 116

*பெரியாழ்வாரின் இல்லம்*

*நள்ளிரவு நேரம்*

(மூல மந்திரம் பின்னணியாக ஒலித்துக் கொண்டிருக்க, பெரியாழ்வார் நள்ளிரவிலேயே, உவகையின் உருவமாக, வீட்டிற்கு ஓடி வருகிறார்.

அப்பொழுதும் விழித்துக் கொண்டிருக்கும் பத்மாவிடமும், ஆண்டாளிடமும், அவர் செய்தியை உகப்போடு சொல்வது, ஓசையின்றிக் காட்டப்படுகிறது.

செய்தியைக் கேட்டு, பெண்கள் இருவரின் முகங்களும் மலர்கின்றன.

பத்மா, ஆண்டாளை விழுந்து கும்பிட்டு, மன்னிப்பைப் பெற முயல்கிறாள்.

ஆண்டாள் தடுத்து அம்மாவை அணைத்துக் கொள்கிறாள்.)

## காட்சி – 117

*வில்லிபுத்தூர் வீதி*

(பெரியாழ்வார், பத்மா, ஆண்டாள், அவள் தோழிப் பெண் கீதா ஆகியோர், கையில் துணி மூட்டையோடு, ஊரை விட்டுச் சென்று கொண்டிருக்கின்றனர்.)

***தோழி கீதா :*** *ஆண்டாள்! உன் மகிமை அறியாது, மடத்தனமாகப் பேசியதையெல்லாம் மன்னித்தருள்!*

***ஆண்டாள் :*** *என் நன்மைக்காகத்தான் நீ பேசினாய்.*

*அதைப் புரிந்து கொண்டதால்தான், மண மேடைக்கு, என்னைக் கைப் பிடித்து அழைத்துச் செல்லும் தோழியாக, உன்னைக் கையோடு அழைத்துப் போகிறேன்.*

பெரியாழ்வார் : 'திருவரங்கம் வா - உன் மகளைத் திருமணம் செய்து கொள்கிறேன்' - என்று பகவான், இந்தக் கலியிலே சொன்னது, கற்பனைக்குக் கூட எட்டாத அற்புதம்!

என் கையில் வளர்ந்த மகவு. அவன் கையைப் பிடிக்கப் போகும் அதிசயத்தைக் காண, இந்தப் பிறவி எடுத்திருக்கிறேன்!

இனி எந்தப் பிறவி எடுத்தாலும், இந்தப் பரவசம் என்னை விட்டுப் போகாது!

(இப்போழுது வழியெங்கும் மங்கையர் பூத்தூவி வழியனுப்பு கின்றனர்.

பின்னணியாகப் பாசுரம் ஒலிக்கிறது.)

"அற்றவன் மருதம் முறிய நடை
கற்றவன் கஞ்சனை வஞ்சனையிற்
செற்றவன் திகழும் மதுரைப் பதிக்
கொற்றவன் வில், கூடிடு கூடலே"

## காட்சி – 118

*திருமாலிருஞ்சோலை - சந்நிதி*

பெரியாழ்வார் : ஆண்டாள்! இந்தத் திருமாலிருஞ் சோலைப் பெருமாளைச் சேவித்து விட்டு, திருவரங்கம் போக வேண்டும் என்று என் மனதுக்குத் தோன்றியது.

ஆண்டாள் : பகவான் எண்ணந்தான், உங்கள் எண்ணமாக வெளிப்பட்டிருக்கும்.

(சந்நிதியில் நின்று பெருமாளை எல்லாரும் சேவிக்கின்றனர்.)

ஆண்டாள் : அப்பா! இந்த மணமுள்ள பொழில் சூழ் மாலிருஞ்சோலை நம்பிக்கு, நான் நூறு மிடாக்களில்

வெண்ணெயும், நூறு மிடாக்களில் சர்க்கரைப் பொங்கலும் படைக்க எண்ணியுள்ளேன்.

இந்தத் திருவுடையான், இவற்றை ஏற்று அருள் செய்வாரா?

*பெரியாழ்வார் :* பேசுவதை இசையோடு பேசம்மா!

இசைவான பதில் கிடைக்கும்.

(ஆண்டாள் இசையோடு பாடுகிறாள்.)

"நாறு நறும் பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான்
நூறு தடாவில் வெண்ணெய்வாய் நேர்ந்து பராவி வைத்தேன்
நூறு தடா நிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்
ஏறுதிருவுடையான் இன்று வந்து இவை கொள்ளுங்கொலோ"

*அசரீரிக்குரல் :* ஆண்டாள்! நீ செய்ய நினைப்பதைச் செய்வதற்கு, உன் அண்ணன் வருவான்! இப்பொழுது நீ திருவரங்கம் சென்று சேர்!

*ஆண்டாள் :* எனக்கு அண்ணன் யார் - அப்பா?

*பெரியாழ்வார் :* அண்ணன் ஸ்தானத்தில் இருந்து, பின்னாளில் ஒருவர், இந்தச் சீர்வரிசையைச் செய்வார்! அதைத்தான் பெருமாள் கூறுகிறார்.

இராமனுக்கு அனுஜனான லட்சுமணனைப் போல, இந்தத் தங்கைக்காக, அந்த அண்ணன், சிந்தை மணக்கச் செய்வாரம்மா!

## காட்சி – 119

*சாலை*

(பெரியாழ்வாரும் ஆண்டாளும் மற்றவர்களும் சாலை வழியாக நடந்து வருகின்றனர்.)

*பெரியாழ்வார் :* மறைப் பெருந்தீ வளர்த்திருப்பார். வருவிருந்தை அளித்திருப்பார். சிறப்பு உடைய மறையவர் வாழ் திருவரங்கத்தை நெருங்கி விட்டோம்.

*ஆண்டாள் :* தீ முகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர், என் முகத்தை நோக்குவாரா அப்பா?

எல்லா உலகும் அளந்து கொண்ட எம்பெருமான், என்னையும் கொள்வாரா அப்பா?

நான் மறையின் சொற்பொருளாய் நின்றவர், என் மெய்ப் பொருளை ஏற்றுக் கொள்வாரா?

செம்மை உடைய திருவரங்கர், தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை பொய்யாகாதே - அப்பா?

*பெரியாழ்வார் :* ஆண்டாள்! அரங்கத்தை நெருங்கும் போது, உன் மனம் ஏன் இப்படி மயங்குகிறது?

அந்த விபீடனுக்காக, மதில் இலங்கைத் திசை நோக்கி, மலர்க் கண் வைத்தவன், என் ஆண்டாளுக்காக, இரு கண்ணும் இமைக்காமல் காத்திருப்பான்; வழி பார்த்திருப்பான்.

## காட்சி – 120

*திருவரங்க நகர் எல்லை*

(திருவரங்க நகர் எல்லையில், கோயில் மரியாதைகளோடு, பல்லக்கு ஒன்று காத்திருப்பது கண்டு, பெரியாழ்வாரும் மற்றவர்களும் திகைக்கின்றனர்.)

*அர்ச்சகர் :* (பெரியாழ்வாரை நெருங்கியபடி...)

பெரியாழ்வாரும், அவர் பெற்றெடுத்த பெண் பிள்ளை ஆண்டாளும், நீங்கள் தானே?

*பெரியாழ்வார் :* ஆம் சுவாமி.

*அர்ச்சகர் :* அரங்கன், என் கனவிலே தோன்றி, தங்கள் வரவைக் கூறினார்.

ஆண்டாள் அம்மையாரைக் கோயில் மரியாதை யோடு, பல்லக்கில் அழைத்து வருமாறு பணித்தார்.

அரங்கனின் ஆணையை அடியோங்கள் நிறைவேற்றிட, இசைவு அளிக்க வேண்டும்.

**பெரியாழ்வார் :** கட்டளை அவனிடமிருந்து என்றால், த[illegible] முடியுமா சுவாமி?

ஆண்டாள்! நீயும் கீதாவும் பல்லக்கில் அமருங்கள்.

**ஆண்டாள் :** அம்மாவும் பல்லக்கில் வரட்டுமே.

**பெரியாழ்வார் :** மணப் பெண்ணுக்கும் தோழிக்கும் தான், அந்த மரியாதை பொருத்தம்!

இவள் என்னவள்! நான் இவளை இழக்க[illegible] மாட்டேன்!

(இதைக்கேட்டு, எல்லாரும் சிரிக்கின்றனர். ஆண்டாளும் கீதாவும் பல்லக்கில் ஏற, திருச்சின்னங்கள் ஒலிக்க, பல்லக்கு செல்கிறது. மற்றவர்கள் பின் தொடர்ந்து நடந்து செல்கின்றனர். இப்பொழுது பின்னணியாகப் பாசுரம் இசையோடு ஒலிக்கிறது.)

"மச்சு அணி மாட மதில் அரங்கர் வாமனனார்
பச்சைப் பசுந்தேவர் தான் பண்டு நீர் ஏற்ற
பிச்சைக் குறையாகி என்னுடைய பெய்வளைமேல்
இச்சை உடையரேல், இத் தெருவே போதாரே?"

## காட்சி – 121

*கோயிலுக்கு வெளியே*

(அரங்கன் கோயிலுக்கு வெளியே, பல்லக்கு வந்து நிற்கிறது. பல்லக்கிலிருந்து ஆண்டாளும் கீதாவும் இறங்குகின்றனர்.

தேவர்களும் முனிவர்களும் அங்கு வந்து திரண்டு நிற்கின்றனர்.

விஷ்ணு சகஸ்ரநாம ஒலி, பின்னணியாகக் கேட்டுக் கொண்டிருக்கிறது.

தோழி கீதா, கைப் பிடித்து அழைத்துச் செல்ல, ஆண்டாள் கோயிலுக்குள் போகிறாள்.

மற்றவர்களும் பின் தொடர்கின்றனர்.)

## காட்சி – 122

*கோயிற் சந்நிதி*

(சந்நிதி வாசலில் பகவான் நிற்கிறார். அங்கு வருகின்ற ஆண்டாள், பகவானைப் பார்த்துப் பரவசப்படுகிறாள்.)

இப்போழுது மத்தளம் கொட்டுகின்ற இசை கேட்கிறது.

பாசுரம் இசையோடு ஒலிக்கிறது.)

*பாசுரம் :* மத்தளம் கொட்ட....

(சங்கின் ஒலி கேட்கிறது.)

*பாசுரம் :* வரி சங்கம் நின்று ஊத....

(இப்போழுது சந்நிதியிலேயே முத்துப் பந்தல் தோன்ற, அதன் கீழ் வந்து நின்று, பகவான் ஆண்டாளின் கரம் பற்றுகிறான்.)

*பாசுரம் :* முத்து உடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மது சூதன் வந்து என்னைக்
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன், தோழி நான்

(பகவான், ஆண்டாளைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு, கர்ப்பக்கிருகம் நோக்கி நடக்கிறார்.

பின்னர், மூலவரோடு ஒளிப் பிழம்பாக இருவரும் ஐக்கியமாகி விடுகின்றனர்.

விஷ்ணு சகஸ்ரநாமம் தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கிறது.

வந்தவர்கள், இதையெல்லாம் பார்த்து, வியப்போடு கை குவித்து நிற்கின்றனர்.)

# காட்சி – 123

*திருப்பாற்கடல்*

ஸ்ரீதேவி : பூதேவி! உன்னுடைய அவதாரம் அற்புதம்! அற்புதம்!

நீ பாடிய பாசுரங்கள், அத்தனையும் தேன்! பாகு! தெவிட்டாத அமுது!

நானும் மானிட ஜாதியில் பிறந்திருக்கிறேன்.

பகவானை, ஒரு மானிடனாக மணந்திருக்கிறேன்.

ஆனால் நீதான், பூமியில் பிறந்து, அவதாரம் என்று பூமிக்கு இறங்கிவராத, இந்த மாதவனையே மணந்திருக்கிறாய்.

உன்போல், தமிழ் நான் பேசியதில்லை.

உன் போல், இதயத்தை இசையில் தோய்த்துப் பகவானுக்குப் படைத்ததில்லை.

உன்போல், சூடிக் களைந்த மாலையை, இந்தச் சுந்தரனுக்குச் சாத்திப் புதுமை செய்ததில்லை.

உன் பாடல் கேட்டு, நாங்கள் பரவசம் ஆவோம்.

ஒன்றை இப்பொழுது பாடிக் காட்டேன்.

உன் நந்தவனம் பெற்ற பெருமை, இந்தப் பாற்கடலும் பெற்றுப் பொங்கட்டும்!

பூதேவி : என் பேச்சிலும் பாட்டிலும் என்ன இருக்கிறது? பேசுபவளும், பாடுபவளும் நானாக இருந்தாலும், குரல் அவரதுதானே!

வீணைக்கேது பெருமை?

*மீட்டுபவருக்கே அது சாரும்!*

*விரும்பிக் கே[illegible]தால், என் மனதில் ததும்பிக் கிடக்கும் பாசுரம்ஒன்றைப் பாடுகிறேன்.*

(இசையோடு பாடுகிறாள்.)

கண்ணன் என்னும் கருந்தெய்வம்
காட்சிப் பழகிக் கிடப்பேனைப்
புண்ணிற் புளிப்பெய்தாற் போலப்
புறம் நின்று அழகு பேசாதே
பெண்ணின் வருத்தம் அறியாத
பெருமான் அரையிற் பீதக
வண்ண ஆடை கொண்டு என்னை
வாட்டம் தணிய வீசிரே!

*ஸ்ரீதேவி :* இதோ, இந்தப் பெருமான் அரையின் பீதக வண்ண ஆடை கொண்டு, உன் வாட்டம் தணியப் போர்த்துகிறேன்!

(இவ்வாறு கூறி, வண்ண ஆடையை, பூதேவியின் மேல் போர்த்துகிறாள்.)

## காட்சி – 124

*திருவரங்கம் சந்நிதி*

*பெரியாழ்வார் :* அரங்கா!

ஒரு மகள் தன்னை உடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்!

செங்கண்மால் நீ கொண்டு போனாய்! செரு ஆளும் புள்ளாளனே! என் சிந்தை அமைதி பெற ஒரு காரியம் நீ செய்ய வேண்டுமப்பா!

செருச் செய்யும் நாந்தும் என்னும் ஒரு வாளனே!

நாங்கள் பிறந்த வில்லிபுத்தூருக்கும், நீ ஒரு பெருமை சேர்க்க வேண்டுமப்பா!

மண்ணாளனே! மறையாளனே! எனையாளனே! ஏழு உலகப் பெரும் பேராளனே! திருவாளனே!

வேத ஒலி கேட்கும் வில்லிபுத்தூரில், என் ஆண்டாளின் கல்யாணக் காட்சியை, உற்சவ மாக நாங்கள் நடத்திட, சம்மதித்து அருள வேண்டும்!

*பகவானின் குரல் :* பெரியாழ்வாரே! எமக்குப் பல்லாண்டு பாடிய பெருந்தகையீர்!

உம் ஆசைப்படி, பங்குனி உத்தரத்தன்று, வில்லிப்புத்தூரிலே, ஆண்டாளை யாம் மணம் செய்கின்ற மங்கலமான வைபவத்தை, உற்சவமாகக் கொண்டாடுங்கள்.

உம்முடைய வில்லிபுத்தூர், ஆண்டாளின் அவதாரஸ்தலமாகிவி[illegible] தால், இனி [illegible] என்று பெயர் பெற்றுச் சிறக்கட்டும்.

இது கோதை பிறந்த ஊர்!; கோவிந்தன் வாழும் ஊர்! - என்று மானுடம் பா[illegible]டும்!

## காட்சி – 125

*ஸ்ரீ வில்லிபுத்தூர் கோயில்*

(கோயிலில், பங்குனி உத்தரத்தன்று, ஆண்டாளின் திருக்கல்யாண உற்சவம், ஊரார் திரண்டிருக்கப் [illegible] முன்னிலையில் கொண்டாடப் பெறுகின்றது.)

(பின்னணியாக, ஆண்டாளின் பெருமையை உணர்த்தும் பாடல் ஒலிக்கிறது.)

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒரு நூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
உயர் அரங்கற்கே கண்ணி உகந்தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வள நாடி வாழியே
வண் புதுவை நகர்க் கோதை மலர்ப் பாதங்கள் வாழியே!

ஆண்டாள் திருவடிகளே சரணம்!

